# வள்ளுவர் சொல்லமுதம்

[இரண்டாம் புத்தகம்]



ஆசிரியர் :

வித்துவான், திருக்குறள்மணி,

திரு அ க நவநீதகிருட்டிணன்

மதிதா இந்துக் கல்லூரி,

திருநெல்வேலி



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1976

அங்கப்ப பிள்ளை நவநீதகிருட்டிணன் (1921)



கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : அகடு

முதற்பதிப்பு : மே 1956
மறுபதிப்பு : சனவரி 1976



VALLUVAR SOLLAMUTHAM
[Part II]

அப்பர் அச்சகம், சென்னை-600 001 (I/2)

# பதிப்புரை

வள்ளுவர், ஓர் அறிவூற்று. அவ்வூற்றில் ஊறிச் சுரந்த தேனீர் ஊற்றுக்கால்களே ஏனைய நூல்கள். வள்ளுவர் காட்டிய வழியே வழி; மற்றோர் வகுத்தன, காலத்தாற் படாது செல்வனவாம். எனவே, வள்ளுவர் ஒருவரே புலவர். இதனானே, 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது' நம் தமிழ்நாடு; தாய்நாடு. நம் தாய்நாடு, ஏனைய சேய்நாட்டிற்கும் இவரை உரிமையாக்கிற்று.

அமிழ்து, நரை திரை மூப்பு பிணி நீக்கி உடற்குச் செம்மைதரும் அரிய மருந்து. வள்ளுவர் அருளிய திருக்குறட் சொல்லமிழ்து, உடற்கன்றி உயிரினது அறியாமைப் பிணிப்பு நீக்கி, அறிவொளி கான்றெழுதரும் காளாமணி விளக்கு. இதன் பெருமையை அக்காலத்து ஆன்றோரும், 'சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த இருவினைக்கு மாமருந்து' எனப் போற்றுவாராயினர்.

இத்தகைய வள்ளுவர் வாய்மொழிக் கடலின் சொல்லமுதத்தை மொண்டு கொண்டெழுந்து அறிவு வானிலே நிற்கும் வித்துவான், திரு. அ. க. நவநீதகிருட்டிணன் என்னும் மாமேகம், உலகெலாம் பருகப் புத்தமிழ்தமாகப் பொழிந்துளது.

இதற்கு, 'வள்ளுவர் சொல்லமுதம்' எனப் பெயரமைத்து, நூலுருவாக்கி அவ் வான் அமிழ்தத் தலைப்பெயலாக முதற் புத்தகம் முன்னரே வெளிவந்துளது. அதுபோல் வழிப் பெயலாக இவ்விரண்டாம் புத்தகமும் வெளிவருகின்றது. இதனையும் அன்பர்கள் வாங்கிக் கற்றுப் பயன்பெறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

பொதுமறை அருளிய புலவர் பெருமானாகிய திருவள்ளுவர் உலகறிந்த பெருநாவலர் ஆவர். அவரது புகழ், தமிழகத்தின் சந்து பொந்துகளிலும் மூலை முடுக்குகளிலும் பொங்கிப் பரவிப் பூரணமாய்ப் பெருகிவிட்டது. அவரது இணையற்ற திருக்குறள் நூலுக்குப் பத்து உரைகள் முன்னர்த் தோன்றின. இன்று எண்ணற்ற புத்தம் புதிய உரைகள், தமிழர் சித்தம் களிக்கத் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. இதனை நோக்கு வார் நுண்மாண் நுழைபுலத்திற்கு ஏற்பச் சுடர்மணி கொழிக்கும் அறிவுச் சுரங்கமாக விளங்கி வருகிறது. திருக்குறள் சுடர்மணிகளை ஞானநீர் கொண்டு கழுவக் கழுவப் பேரொளியே வீசும். பக்கங்களைத் தீட்டத் தீட்டப் பேரொளியே கூட்டும்.

'நவில்தொறும் நூல்நயம்' என்னும் அவரது மறை மொழிக்குத் தக்க சான்றாய்த் திகழ்வது அவர் அருளிய நூலே. புலவன் தனது வாழ்நாள் முழுதும் ஆய்ந்துகண்ட அரும்பெறல் உண்மைகளை எல்லாம் தொகுத்துக் கருத்தை ஒருவழி நிறுத்தி ஒரே நூலாக ஆக்குவானாயின் அந்நூல் தன்னேரில்லாத பொன்னேடாகவே பொலிவுறும் என்பதில் ஐயமில்லை. அம் முறையில் நம் தமிழ்மொழிக்கண் மூன்று நூல்களே தோன்றின. அவை திருக்குறள், சிலப்பதிகாரம், திருத்தொண்டர் புராணம் என்பன. இம் மூன்றனையும் இயற்றியருளிய புலவர்கள் இணையற்ற பெருமையுடையவர்கள். திருவள்ளுவர் தெய்வப்புலவர் என்று போற்றும் திறம் பெற்றவர். நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் அருளிய இளங்கோ, சேரமன்னர்; இளமையில் துறவுபூண்ட அடிகளார். சேக்கிழார், சோழப் பேரரசின் முதல் அமைச்சராய்த் திகழ்ந் தவர். இம் மூவரும் தனித்தனி ஒரு நூலே ஆக்கியருளினர் அந்நூலை அன்றி ஒரு பாடலேனும் வேறு பாடினாரல்லர்.

தமிழின் இணையற்ற பெருநூல்கள் மூன்றனுள்ளும் முதன்மை சான்றது தெய்வப்புலவர் அருளிய திருக்குறளே என்பதை இயம்பவும் வேண்டுமோ? இந்நூலை முறையாகக் கற்கவேண்டும் என்ற பேரார்வம் தமிழரிடையே இன்று பெருகியிருக்கிறது. அக் காரணத்தால் வள்ளுவரை ஒரு சிறிது கற்ற எளியேற்குப் பத்தாண்டுகளாகத் தொடர்ந்து திருக்குறள் விரிவுரையாற்றும் பேறு, நெல்லையில் நெல்லையப்பர் திருக் கோவிலிலும் தருமையருள்பெறு அருணகிரிக் கழக மன்றத் திலும் வாய்த்தது. அதன் பயனாகவே 'வள்ளுவர் சொல்லமுதம்' என்னும் இச் சின்னூல் உருவாயது. இதன் முதற் புத்தகம் 'திருக்குறள் தெள்ளமுதம்' முதல் 'ஊக்கமும் ஆக்கமும்' என்பது ஈருகப் பதினொரு தலைப்புகளோடு கூடி முன்னர் வெளிவந்துளது. இஃது, இரண்டாம் புத்தகமாக வெளிவரு கின்றது. இதன்கண் 'தானமும் தவமும்' முதலாக 'பெரியரும் சிறியரும்' என்பது ஈருக ஒன்பது தலைப்புகள் உள்ளன. வள்ளுவரைப் பல வடிவில் பலர் வாயிலாகக் கண்டு மகிழும் தமிழுலகம் இதனையும் ஏற்றுப் போற்றும் என்னும் உறுதி யுடையேன்.

எளியேன்பால் அமைந்த ஒரு சிறு எழுத்து வன்மையையும் பழுத்துக் கனியுமாறு செய்யவேண்டும்; அதன் பயனைத் தமிழர் துய்க்குமாறு செய்யவேண்டும் என்ற பெருவிருப்பால் என்னைப் பலகால் நூல்கள் எழுதுமாறு ஊக்கிவரும் தமிழ்ப் பெருங்காவலராய கழக ஆட்சிப் பொறுப்பாளர் உயர்திரு. வ. சு. பிள்ளையவர்கட்கு என்றும் மாருத நன்றியுடையேன்.

தமிழ் வேல்க!

அ. க. நவநீதகிருட்டிணன்.

# உள்ளுறை

# வள்ளுவர் சொல்லமுதம்

## [இரண்டாம் புத்தகம்]

### க. தானமும் தவமும்

வள்ளுவர் சொல்லமுதின் தெள்ளிய தீஞ்சுவையை உள்ளவாறு கண்டுணர்ந்து சொல்லிய உரைவல்லார் பல்லோருள்ளும் ஒப்புயர்வற்று ஒளிர்பவர் பரிமேலழகர் என்பதை எவரும் அறிவர். அதனாலேயே உமாபதி சிவனார், 'தெள்ளு பரிமேலழகர் செய்த உரை' என்று தேர்ந்து போற்றுவாராயினர்.

'பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தஉரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தஉரை யாமோ தெளி.'

இங்ஙனம் வள்ளுவர் நூலையும் அதற்கு வாய்த்த பரிமேலழகர் உரையையும் மற்றொரு புலவர் வியந்து போற்றினர். இத்தகைய புலமை நலம் கனிந்த தலைமை சான்ற உரையாசிரியராகிய பரிமேலழகர்,

'தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்'

என்ற குறட்பாவுக்கு விளக்கம் கூறுமிடத்துத் தானம், தவம் ஆகிய இரு சொற்களின் பொருள் நலத்தைத் தெளிவுற விளக்குகின்றார்.

தானமாவது யாது? அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல். தவமாவது யாது? மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும்பான்மைபற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன என்று குறித்தார் பரிமேலழகர்.

இல்லறத்திற்குரிய தானமும் துறவறத்திற்குரிய தவமும் தடையின்றி நடைபெறுதற்கு மழை இன்றியமையாதது என்றார் வள்ளுவர். மழை இல்லையேல் மாநிலத்து உயிர்கட்கு வாழ்வில்லை. தவமுடையார் இலராயின் தாரணிக்கண் தண்மழை பொழிவதுமில்லை. துறவியர் தவம் தூய்மையுற நடைபெறவேண்டுமானால் நல்லாட்சி புரியும் வேந்தன் நாடாள வேண்டும். இல்லறத்தார் இலராயின் வேந்தனும் இலனாவான். இக் கருத்துகளைக் கூர்ந்து நோக்குவோமாயின் அனைத்திற்கும் அடிகோலுபவர் இல்லறத்தாரே என்பது அறியப் படும். இல்வாழ்வார் செய்யும் தானமாகிய நல்லறமே தவம் புரிவார் வாழ்வைத் தழைவிக்கிறது. அவரது அருந்தவமே பெருமழையைப் பொழிவிக்கிறது. அம் மழையினால் நாடும் காடும் செழிக்கின்றன. நாட்டில் வாழும் குடிகள் நலமெய்துகின்றனர். அவரை ஆளுதற்கு அரசன் ஒருவன் தேவைப்படுகிறான்.

நாட்டில் மழை வளம் செழிப்பதற்கு மன்னவன் ஆட்சியும் ஒரு காரணமாகும். செங்கோல் வேந்தன் ஆளும் நாட்டில் பருவமழை பொழிவதும், விளையுள் பெருகுவதும் தப்பா என்பர் ஒப்பில்புலவர்.

'இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு'

என்பது அவரது சொல்லமுதம். மலை வளம் காணச் சென்ற சேரவேந்தனாகிய செங்குட்டுவனைப் பேரியாற்றங் கரை மணல்மேட்டில் தண்டமிழ் ஆசானாகிய சாத்தனார்

கண்டு மகிழ்ந்தார். அவன்பால் மலைவாழ் வேட்டுவர் வந்து, ஒரு மார்பு இழந்ததிருமா பத்தினியின் செய்தியெல்லாம் சொல்லக் கேட்டார். கற்பரசி கண்ணகியாட்கு மதுரையில் நிகழ்ந்த மாபெருந் துயரையெல்லாம் எடுதது இயம்பினர். பாண்டியன் நெடுஞ்செழியன் மாண்ட செய்தியினையும் அறிவுறுத்தினர். நன்னூற் புலவராய சாத்தனர் சொன்ன மொழிகளைக் கேட்ட மன்னவன் பாண்டியனது செங்கோன்மையைப் பாராட்டினன். நெடுஞ்செழியன் நீதி தவறினன் என்ற பழிச்சொல் எம்மைப் போன்ற மன்னர் தம் செவிப்புலம் படுதற்கு முன்னர் 'அவன் இறந்தான்' என்ற சொல்லே கேட்குமாறு செய்தான் பாண்டியன். ஆதலின் 'வல்வினை வளைத்த கோலை, மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோல் ஆக்கி விட்டது' என்று வியந்து போற்றினன்.

பின்னர்ச் செங்குட்டுவன் அரசகுடியில் பிறத்தலால் உள்ள பெருந்துன்பத்தைப் புலவர்க்குக் கூறினன். "புலவர் பெருமானே! மாநிலம் காக்கும் மன்னர் பெருங்குடியில் பிறத்தல் துன்பமேயன்றித் தொழத்தக்க பெருமை ஏதுமில்லை. நாட்டில் மழை பெய்யாது ஒழியுமாயின் அரசர்க்கே அச்சம் பெரிதாகும். ஏதேனும் ஒன்றால் உயிர்கள் வருத்தமுற்றால் அதனாலும் அரசர்க்கே அச்சம் பெரிதாகும். ஆதலின் கொடுங்கோலுக்கு அஞ்சி மக்கட் கூட்டத்தினைப் புரக்கும் மன்னர் குடியில் உதித்தல் மாபெருந் துன்பமேயாகும்," என்று இயம்பினன்.

'மழைவளம் கரப்பின் வான்பே ரச்சம்
பிழைஉயிர் எய்தில் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லென'

என்பது செங்குட்டுவன் கூற்றாக இளங்கோவடிகள் இயம்பும் மொழியாகும்.

திங்கள் மும்மாரி பெய்யும் திருவுடைய நாடு என்று புலவர்கள் புகழ்வதுண்டு. வேதம் ஓதும் வேதியர்க்கு ஒரு மழையும், மாதர் கற்புடை மங்கையர்க்கு ஒரு மழையும், நீதி மன்னர் நெறியினுக்கு ஒரு மழையு மாக நாட்டில் மும்மழை பொழியும் என்று மொழிவர். இத்தகைய மழையாலேயே பூமி செழிக்கவேண்டும். பூமி செழிக்குமானால் புல் முதலிய எல்லா உயிர்களும் இன்புற்று வாழும். மழைத்துளி வீழாதாயின் நிலத்தில் பசும்புல்லின் தலையையும் காண்பது அரிதாகும். அள வில்லாத நீர்ப் பெருக்கினையுடைய நெடுங்கடலும் தன் னியல்பு குறையும். தெய்வங்கட்குப் பூசையும் விழவும் மக்கள் போற்றிச் செய்யார். இல்வாழ்வார் செய்யும் தானம் தடைப்பட்டுவிடும். துறவியர் செய்யும் தவம் சிறிதும் நடவாது.

துறவியர் தவம் தழைப்பதற்குக் காரணமாய தானத்தைப்பற்றிச் சிறிது விளக்கமாகத் தெரிந்து கொள்ளலாம். இதனை வள்ளுவர் ஒப்புரவறிதல், ஈகை என்ற இரண்டு அதிகாரங்களால் இனிது விளக்குகிறார். ஒருவன் அறவழியில் தேடிய பொருள் முழுதும் தக்கார்க்கு உதவும் பொருட்டே என்று உரைப்பார் வள்ளுவர்.

''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு''

என்பது வள்ளுவர் சொல்லமுதம். ஒப்புரவு என்பது உலகத்தாரோடு ஒத்துச்செய்யும் சிறந்த தொழிலாகும். செய்யத்தகும் சீரிய தொழில்கள் யாவை என்பதை ஆராய்ந்து செய்ய வேண்டுமாதலின் ஒப்புரவறிதல் என்று குறித்தார். இதற்குப் பரிமேலழகர் 'உலக நடையினை அறிந்து செய்தல்' என்று பொருள் வகுத்தார். மணக்குடவர் என்னும் மற்றோர் உரையாசிரியர், 'இல்லென இரந்து வந்தார் யாவர்க்கும் வரையாது கொடுக்கும் ஆற்றல் இலரெனினும் தம் அளவிற்கும் தம் வருவாய் அளவிற்கும் ஒக்கத் தக்கார்க்குத் தக்கன

அறிந்து கொடுத்தல்' என்று விளக்கமாகப் பொருள் உரைத்தார். உரையாசிரியர் இருவர் கருத்துகளும் 'பிறர்க்கு உதவி செய்தல்' என்ற ஒரே கருத்தைத் தான் வலியுறுத்துகின்றன.

கைம்மாறு கருதாமல் மற்றவர்க்கு உற்றுழியுதவும் பெற்றியாரை மாரிக்கு ஒப்பிட்டு உரைப்பார் வள்ளுவர். மழையைப் பொழிந்து மாநிலத்தை வாழ்விக்கும் மேகங் கட்கு உயிர்கள் என்ன கைம்மாறு செய்யவியலும்! அம் மேகம் போலும் மேலோர், பிறர்க்குச் செய்யும் நலங்களும் எதிர் உதவியை நோக்குவனவல்ல. இத்தகைய ஒப்புர வுக்கு ஒப்பான உயர்ந்த செயல்கள் எவ்வுலகத்தும் இல்லையென்பார் வள்ளுவர். ஒப்புரவு செய்யும் உள்ளம் இல்லாதவன் உயிருடன் வாழினும் இறந்தவனுகவே எண்ணப்படுவான். ஆதலின் அறிவுடையார் பிறர்க்கு உதவிபுரிதல் தமது பெருங்கடன் என்று எண்ணுவர். நமது கை, இனிய பண்டங்களைச் சுவைத்து உண்ணு மாறு நாவிற்கு எடுத்து நல்குகின்றது. அந் நாக்குத் தன்னை நயந்து பாராட்டும் என்ற நோக்குடன், கை அச் செயலைப் புரிவதில்லை; தனது கடமை என்று அச் செயலைப் புரிகின்றது. அதுபோலவே தமது கடமை யென்று உணர்ந்த கற்ருேர் மற்றவர்க்குத் தம்மால் இயன்றவளவு முயன்று துணைபுரிவர். தம்பால் செல்வம் சுருங்கிய காலத்திலும் பிறர்க்கு உதவி செய்ய உள்ளம் தளரார் என்பர் வள்ளுவர். ஆற்றில் நீர்ப்பெருக்கு அற்றுப்போய், நடப்பவர் அடியைச் சுடும் கொடிய வெப்பம் நிறைந்த கோடைகாலத்திலும் அவ் ஆறு, தன்பால் ஊறிவரும் நீரால் உலகை ஊட்டுகின்றது. அதுபோலவே நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராயினும் ஏற்றவர்க்கு இல்லை யென்று சொல்ல மாட்டார்கள்.

''எற்றென்றும் இல்லா விடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தற் சேர்ந்தார்க்(கு) அசைவிடத்(து)—ஊற்றுவர்

அற்றக் கடைத்தும் அகல்யா(று) அகழ்ந்தக்கால்
தெறறெனத் தெண்ணீர் படும்''

என்பது நாலடிப் பாடலாகும்.

வானத்தில் உலவும் மதியத்தை ஒருபால் பாம்பு பற்றிக் கொண்டாலும் மற்றொருபால் மாநில இருளைப் போக்கும் பேரொளியைப் பொழிகிறது. அதுபோலவே உயர்குடியில் தோன்றிய உத்தமர்கள் தம்மை வறுமை பெரிதும் வாட்டினாலும் ஒப்புரவு செய்தற்கு உள்ளம் சோர்வுகொள்ளார் என்பர் சமண முனிவர். இவ் ஒப்புரவு செய்தலின் உயர்வை வலியுறுத்தப் புகுந்த வள்ளுவர்,

''ஒப்புர வினல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து''

என்று அருளினார். ஒப்புரவு செய்வதால் ஒருவனுக்குப் பெருங்கேடு வரும் என்று எவரேனும் இயம்புவராயின் அக் கேட்டை, ஒருவன் தன்னை விற்றாயினும் பெற்றுக் கொள்ளலாம் என்று வள்ளுவர் சொல்லியதன் கருத்து யாது? தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொரு பொருள் இல்லையல்லவா! ஒப்புரவினால் கேடு வருமாயின், தன்னை விற்றும் கொள்ளப்படும் பொருள் ஒன்றும் உளதாகும். எனவே ஒப்புரவு செய்தல் என்றும் எள்ளளவும் கேடு தருவதில்லை, நலமே பயப்பது என்ற உண்மையையன்றோ திண்மையுற விளக்கினார் திருவள்ளுவர்?

'ஈதல் அறம்' என்பார் தமிழ் மூதாட்டியார். ஈயென இரத்தல் இழிந்தோன் செயல் என்பர். அங்ஙனம் இரப்போர் பொருள் இல்லாத வறியராவர். அவர்கட்கு வேண்டியதொன்று விருப்புடன் அளிப்பதே ஈகை என்பர் திருவள்ளுவர்.

''வறியார்க்கொன்(று) ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து''

என்பது அவரது சொல்லமுதம். வறியர் அல்லாதார்க்கு வழங்குவதெல்லாம் ஒரு பயன் கருதியே. அது குறி

யெதிர்ப்பை என்று குறிக்கப்படும். அளவு குறித்து வாங்கி அவ் வாங்கியவாறே எதிர்கொடுப்பதுதான் குறியெதிர்ப்பை எனப்படுவது. இவ் ஈதல் அறமே வீட்டுலகிற்கு ஏற்ற நெறியாகும். ஈந்தார்க்கு அவ்வுலகம் இல்லையென்று யாரேனும் கூறுவராயினும் ஈதலே நன்று என்று வலியுறுத்தினர் வள்ளுவர்.

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"

என்று இரவின் இழிவையும் ஈதல் உயர்வையும் வலியுறுத்தினர் பழம்புலவர்.

உலக முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளும் அரசனுக்கும் அல்லும் பகலும் துஞ்சாது அஞ்சாது காட்டகத்தே கொடிய விலங்குகளை வேட்டையாடும் வேட்டுவனுக்கும் ஊணும் உடையும் பிறவும் எல்லாம் ஒக்கும். ஆதலின் ஒருவன் ஈட்டிய செல்வத்தின் பயன் ஈதலே. அதனைச் செய்யாது செல்வத்தை நாமே நன்ருகத் துய்ப்போம் என்று கருதின் தப்பிப்போவன பலவாகும் என்று அறவுரை வழங்கினர் நக்கீரர்.

"தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓரொக்குமே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே"

என்பது நக்கீரருடைய நயந்தரு பழம்பாடல். - 'செல்வத்துப் பயனே ஈதல்' என்ற சிறந்த உண்மையை

உணர்ந்த உயர்ந்தோர் அனைவரும் தமது இல்லற வாழ்வின் நல்லறமாக ஈகையை மேற்கொண்டனர்.

பழந்தமிழ் நாட்டில் அருந்தமிழ்ப் புலவரைப் போற்றி ஆதரிக்க வள்ளல்கள் பலர் இருந்தனர். அவர்கள், தம்பால் புலவர்கள் வந்தபோழ்தெல்லாம் அகமும் முகமும் மலர அன்புடன் வரவேற்றுப் பொன்னையும் பொருளையும் வரையாது வழங்கினர். அதியமான் நெடுமான் அஞ்சியின் அருள் உள்ளத்தை, நெஞ்சாரச் செஞ்சொற்களால் வியந்து போற்றினார் தமிழ் மூதாட்டியார். தமிழிடத்துத் தணியாத காதல் கொண்ட அதியமான் தமிழ்ச் செல்வியராகிய ஔவையாரிடத்தும் பேரன்புபூண்டு விளங்கினான். ஆதலின் தன்பால் பரிசில் பெற வந்த ஔவையார்க்கு விரைவில் பரிசிலை வழங்காது காலம் தாழ்த்தான். அதனால் அவர்க்குச் சிறிது வருத்தம் தோன்றிற்று. அங்ஙனம் வருந்திய நெஞ்சிற்கு ஆறுதலாகச் செஞ்சொற் பாடல் ஒன்றைப் பாடியருளினார். அதியமானிடத்து ஒருநாள் இருநாள் மட்டுமல்ல, பலநாள் பலரோடு கூடச் சென்றாலும் முதல்நாள் சென்றபோது எத்தகைய தலையன்புடன் வரவேற்று உபசரித்தானோ, அங்ஙனமே ஒவ்வொரு நாளும் உள்ளன்புடன் ஏற்றுப் போற்றும் இனிய வள்ளல் அவன். அவனது பரிசிலைப் பெறுவதற்குக் காலம் நீட்டித்தாலும், நீட்டியாது நெருங்கினாலும் யானை தனது கொம்பிடையே வைக்கப்பட்ட கவளம் வாயில் செல்லுதல் தப்பாததுபோல, அப் பரிசில் கிடைப்பதும் தப்பாது என்று குறித்தருளினார். இங்ஙனம் வள்ளல்களால் புலவர்கள் பெரிதும் போற்றப் பெற்றாலும், தாம் பெற்ற பரிசிற் பொருளை யெல்லாம் மற்றவர்க்கும் வழங்கிப் பகுத்துண்ணும் பண்புடையராக விளங்கினர்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் நல்லறமே தலையாய பேரறம் என்று பேசுவார் பெருநாவலர். அங்ஙனம் பகுத்துண்டு பழகிய நல்லோனை எந்நாளும் பசிப்பிணி

தீண்டாது. வறியவர் உறுபசியை ஒழிப்பதே பொரு ளுடையார் செய்யத் தகும் அரிய செயலாகும். வறியவர் வயிறே, அன்னவர் செல்வத்தை அழியாது பூட்டி வைக்கும் பெட்டகம். இங்ஙனம் ஏழையரின் பசிப் பிணியைத் தமது ஈகையால் போக்கும் இல்லறத்தார் இணையற்ற வல்லமை பெற்றவர். தமது கடும்பசியைப் பொறுத்தலே தவத்தவர்க்குப் பெருவலியாகும். பிறர் பசியைக் களையும் இல்லறத்தார் வல்லமைக்குப் பிற்பட்டதே தவத்தவர் பெருவலி என்று குறிப்பார் திருவள்ளுவர்.

'ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்'

என்பது அவரது சொல்லமுதம்.

தவம் புரியும் துறவியரினும் தானம் செய்யும் இல்லறத்தார் ஏற்றமுடையவர் என்று இயம்பிய வள்ளுவர், தவத்தைப்பற்றிச் சொல்லும் கருத்துகளைச் சிறிது நோக்குவோம். இல்லறம் துறவறமாய இரண்ட னுள்ளும் சிறந்தது இல்லறமே என்பதை வலியுறுத்த இல்லறவியலை முதற்கண் வகுத்தார். மேலும்,

'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப(து) இல்லாயின் நன்று'

என்று இல்வாழ்வின் சிறப்பை வலியுறுத்தினர். இல்லறத்தில் வழுவாது ஒழுகிய அறிவுடையார், பிறப் பிற்கு அஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறவுபூணுவர். அவரது துறவே தூய்மை நிறைந்து துலங்குமாதலின் இல்லறவியலை யடுத்துத் துறவறவியலை வகுத்தருளினர். துறவறத்தின் தலையாய செயல் தவம் ஆகும். அத் தவம் பெருமையடையக் காக்கத்தக்க நோன்புகள் பலவுள. அவற்றை வழுவாது காத்து ஒழுகுவதால் மெய்ஞ்ஞானம் கைவரப்பெறுவர். அந்த மெய்யுணர்வே அந்தமிலா இன்ப வீட்டை அடைவிக்கும் ஆற்றலுடையது.

ஒருவன் தனது ஆற்றலுக்கு ஏற்றவாறு போற்றி யொழுகும் அறங்களையும் போக்கலாகும் பாவங்களையும் வரையறுத்துக் கொண்டு, அவற்றின் வழுவாது நடப்பதே நோன்பு எனப்படும். தவத்தவர் தாங்கி யொழுகத்தக்க நோன்புகள் பல. அவற்றுள்ளே பலவற்றையும் அகப்படுத்து நிற்கும் சிலவற்றையே வள்ளுவர் வகுத்துரைக்கின்றார். அருளுடைமை முதலாக ஒன்பது அதிகாரங்களில் தவத்தவரின் விரதங்கள் விளக்கப் படுகின்றன. அருள், புலால் உண்ணாமை, தவம்புரிதல், கூடாவொழுக்கம் தவிர்தல், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, கொலை புரியாமை ஆகியவற்றை நோன்புகளாகக் காத்தொழுகும் உறுதி, தவத்தவர்க்கு உளதாக வேண்டும். இந் நோன்புகளால் உட்கருவிகள் தூய்மையடையப் பெற்றோரே மெய்யுணர்வு உற்றார் ஆவர்.

தவம் என்பது யாது? உள்ளம் பொறி வழியே செல்லாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் வேண்டும். கோடைக்கண் வெயிலில் நிற்க வேண்டும். மாரியினும் பனியினும் நீரில் நிற்கவேண்டும். இவற்றால் தம் உயிர்க்குவரும் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களைப் பேணுதல் வேண்டும். இவ்வியல்புகளையெல்லாம் வள்ளுவர் பெருமான் தமது சொல்லமுதத்தில் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறார்.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு'

என்பது அவரது சொல்லமுதம். இப் பாவால் தவத்திற்கு இலக்கணம் யாது என்பதை ஓதியருளினார்.

இத்தகைய தவத்தை எல்லோரும் மேற்கொள்ளுதல் என்பது இயலாது. தவமும் தவமுடையார்க்கு ஆகும் என்று இயம்புவார். முன்னைப் பிறப்பில் தவம் செய்யாமல் இப் பிறப்பில் அதற்குரிய முயற்சியைக் கொள்வதால் தவம் கைகூடாது என்பதே தெய்வப்புலவர்

திருவுள்ளம். முன்னைத் தவம் இல்லாதார் அதனை மேற்கொள்வது அவம் என்றே அறுதியிட்டு உரைக்கின்றார். தவத்தைச் செய்பவரே தங்கருமம் தவறாது செய்பவர் என்பது வள்ளுவர் கருத்து. தன்னைப்பற்றியும், பிற உயிர்களைப்பற்றியும், தெய்வத்தைப்பற்றியும் வரும் மூவகைத் துன்பங்கட்கு இடமாகவுள்ள உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்தலால், பிறப்புப் பிணி மூப்பு இறப்புகளால் துன்பம் எய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடுபெறும். ஆதலின் 'தவம் செய்வார் தங்கருமம் செய்வார்' என்று தலைக்கொண்டு போற்றினார்.

பசுவின் பாலை வற்றக்காய்ச்சக் காய்ச்ச அதன் சுவை குறைவதில்லை. நெருப்பில் நன்றாகச் சுடினும் செம்பொன் தன்னொளி குன்றுவதில்லை. பாலின் சுவையும் பசும்பொன் ஒளியும் மேலும் பெருகுவதைக் காணுகின்றோம். அவை போலவே, தவத்தவர் தமது நோன்புகளால் வரும் துன்பம் வருத்த வருத்த அவரொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் ஓங்கும் என்பர்.

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். இத்தகைய தவத்தால் ஒருவன் தனது உயிர் ஐம்பொறிகட்கு அடிமையாகாமல் முழுதும் தனக்கு உரிமையாக்கிக் கொள்ளுவானாயின் அவனை மாநிலத்து மன்னுயிர்களெல்லாம் தொழும். அன்னான் எவராலும் கடக்க முடியாத இயமனையும் கடக்க முடியும். தனது அறத்திற்குப் பகையாய் அழிவு செய்வாரைக் கெடுக்க நினைத்தால் கெடுக்க முடியும் அதனைப் பாராட்டிய மக்களைச் சீராட்டி உயர்த்த நினைத்தால் உயர்த்த முடியும். சபித்தலும் அருளலும் ஆகிய இருவகை ஆற்றலும் பெறுவான். இப் பிறவியில் முயன்று செய்த பெருந்தவத்தால் மறுமையில் பெற விரும்பிய பயன்களைப் பெற்றுமகிழலாம்.

'ஆக்கமும் திறலும் சீரும்
ஆயவும் நலனும் மேலாம்
ஊக்கமும் வீடும் எல்லாம்
தவத்தின(து) ஊற்றம் அன்றே!'

என்பர் கச்சியப்பர்.

உலகில் செல்வர் சிலரே உளர். வறுமையால் வாடுவோர் மிகப் பலர். இதற்குக் காரணம் தவமும் தவமின்மையுமேயாம் என்பர் வள்ளுவர். முன்னைத் தவமுடையார் இம்மையில் பொன்னும் பொருளும் பூத்து விளங்குவர். அஃதில்லார் வறிஞராகவே வாடித் திரிவர் என்கின்றார்.

'இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். மறுமைப் பேரின்பமேயன்றி இம்மைச் சிற்றின்பத்தையும் தரவல்ல பெருமை தவத்திற்கு உண்டு. ஆதலின் தவம் காரணமாகவே பெற்ற பெருஞ்செல்வத்தைத் தான மீந்து வானவரும் எய்தா வீட்டு நெறியில் புகுதல் வேண்டும்.

## உ. சினமும் குணமும்

'ஆறுவது சினம்' என்பது தமிழ் மூதாட்டியின் அமுத மொழி. சினத்தைக் குறிக்கத் தமிழில் பல சொற்கள் உள. வெகுளி, கோபம், கதம், சீற்றம், செற்றம், சினம் என்பன ஒரு பொருட் சொற்கள். இது மிகவும் பொல்லாத தீய குணமாகும். பல தீவினைகட்கும் இஃது அடிப்படையானது என்பர் அறிஞர். இத்தகைய சினத்திற்கு மனத்தில் இடங் கொடுத்து விட்டால் அது மனமுழுமையும் தனதாக்கிக் கொள்ளும் கொடுமை வாய்ந்தது ஆதலின் உள்ளத்தில் சினம் தோன்றுதற்கே இடந்தரலாகாது. ஒருகால் தோன்றினும் அதனை உடனே தணித்தல் வேண்டும். இதனாலேயே சினத்திற்கு இலக்கணம் இயம்புவார்போல 'ஆறுவது சினம்' என்றார் தமிழன்னையாகிய ஔவையார். தணியத்தக்கது சினம். அதனைத் தணியவிடாது பெருகுமாறு செய்வது பேதைமை என்பதே அம் மூதாட்டியின் கருத்தாகும். 'சினம் ஆறுவது' என்று கூருமல், 'ஆறுவது சினம்' என்று கூறியதன் கருத்துக் கூர்ந்து நோக்கத்தக்கதாகும். கொடிய பாவங்களுக்கெல்லாம் அடிகோலுவதாகிய சினம் சிறிதளவுகூடப் பிறர் அறியுமாறு சிந்தையில் தோன்றவிடுவது முறைமையன்று என்பதே அவரது ஆழ்ந்த கருத்தாகும்.

இந்த உண்மையை இனிது உணர்ந்த சிவப்பிரகாசர் சினங் கொள்வார்க்குச் சிறந்த நன்னெறி காட்டுகின்ருர். ஆற்றில் பெருகி வரும் வெள்ளத்தை அணையிட்டுத் தடுத்தலே அருஞ்செயலாகும். தடங்கரையை உடைத்து வெள்ளத்தை ஊருள்ளே விடுதல் அரிய செயலன்று. அது போலத்தான் உள்ளத்தையெல்லாம் தன்வயப் படுத்திக்கொண்டு பொங்கியெழும் சினத்தை அடக்கும் செயலே அரிய குணமெனப் போற்றத்தகும்.

அதனைப் பெருக விடுவது பேரழிவையே தரும் என்று பேசுவார்.

'உள்ளம் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு'

என்பது சிவப்பிரகாசர் காட்டும் செந்நெறியாகும்.

சினம் எழுவதற்கு அவாவே காரணம் என்பர் வள்ளுவர். ஒருவன் கடுஞ்சொல் பேசுவதற்குக் காரணமாவது இச்சினமே. நெருப்புப் பற்றிய இடம் வெந்து நீருகும். ஆனல் சினத்தீ, தான் தோன்றுவதற்கு இடமானவரையன்றி, அவர்க்கு இனமானவரையும் அழித்தொழிக்கும் இயல்புடையது. ஆதலின் திருவள்ளுவர் இச் சினத்தைச் 'சேர்ந்தாரைக் கொல்லி' என்று குறித்தார். மலைக்கண் உள்ள மூங்கில் மரங்கள் காற்றால் ஒன்ருேடொன்று உராய்ந்து தீப்பற்றிக் கொள்ளும். அம் மூங்கிலில் முளைத்த தீ, அதனை வேருடன் எரித்துச் சாமபராக்குவதன்றிச் சார்ந்து நின்ற வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வெந்து போமாறு செய்யும். அது போலவேதான் ஒருவனது உள்ளத்தில் உதித்த சினத்தீ அவனையும் அவனது உற்ருர் உறவினரையும் அழித்தொழிக்கும் கொடுமையுடையது என்பர் கம்பர் பெருமான்.

'மூங்கிலில் பிறந்த முழங்குதீ மூங்கில்
முதலற முறுக்குமாப் போலத்
தாங்கரும் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாம் தகிக்கும்.'

இக் கருத்தைத் தெய்வப் புலவராய திருவள்ளுவர் இரு சிற்றடிக்குள்ளே செப்பும் திட்பம் மிகச் சிறப்பு வாய்ந்ததாகும்.

'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். ஒருவனுக்கு இனமாய் அமைந்த உறவினர் அவனுக்கு என்றும் பெருவலியாக நின்று உதவுவர். தாய் அறுசுவை உணவூட்டித் தனையனை இனிது வளர்ப்பாள். தந்தை மகனது சிந்தையில் கல்வியூட்டிச் சிறப்படையச் செய்வான். சிறந்த மக்கள் செல்வத்தைப் பேணுவர். உற்றவரெல்லாம் வாழ்வுக்கு உறுதுணையாக நிற்பர். உடன்பிறந்தவர்கள் தோள் வலியாக நின்று துணைபுரிவர். மனைவி, வாழ்விலும் தாழ்விலும் மாண்புறு வாழ்க்கைத் துணையாவாள். இங்ஙனம் ஒருவனது இனத்தவரெல்லாம் வாழ்வெனும் கடலைத் தாண்ட வலமுள்ள புணையாக விளங்குவர். அவர்களும் அழிவதற்குக் காரணமாகவன்றோ சினம் விளங்குகின்றது! மேலும் முற்றத் துறந்து தவ ஞானங்களால் சிறந்த நல்லினத்தார் நட்புச் சினமுடையார்க்கு இலதாகும். ஆதலின் அவரால் அருளொடு பகரப்பெறும் பொருண்மொழிகளை இழப்பர். பிறவிக் கடலுள் அழுந்தாமல் பேரின்ப வீடு என்னும் பெருங்கரை ஏற்றுகின்ற பெரியார், ஏமத்தை அருளும் புணையாவர் அன்றோ? அவர் தம் அருளும் பொருண்மொழியும் ஒருவற்கு இல்லையாயின் நல்ல வாழ்வேது? இத்தகைய கருத்துகளையெல்லாம் உள்ளடக்கிச் சொல்லும் வள்ளுவர் நுண்மாண் நுழைபுலத்தை வியவாதார் யாவர்?

ஒருவன் தனது சினம் பயன் விளைக்கும் இடத்து அதனை எழாமல் தடுப்பதே சிறப்புடைய அருட்செயலாகும். மற்றைப் பயன் விளையாத இடத்தில் அதனைத் தடுத்தலாலோ தடாது விடுத்தலாலோ யாது பயன்? வலியவன் ஒருவன் சினத்திற்கு மெலியவன் ஆளானால் எத்துணை நலிவெய்துவான்! ஒருவன் தன்னின் மெலியவன்மீது சினங்கொள்ளும்போது வலியவன் முன்னால்

தன்னிலையைச் சிறிது எண்ணுதல் வேண்டும் என்பார் வள்ளுவர்.

'வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லு மிடத்து'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். சிலர் தம்மின் வலியார் மேல்கொள்ளும் சினத்தாலேயே தீது விளையும்; எளியார் மேல்கொள்ளும் சினத்தால் நன்மையே விளையும் என்று எண்ணுவர். ஆனல் வள்ளுவரோ எளியார் மேல் எழும் சினத்தால் பெருந்தீங்கு விளையும் என்று பேசுவார். செல்லா இடத்துக்கொள்ளும் சினத்தால் இம்மைக்கண் அவ் வலியாரால் வரும் நலிவே. எளியவர்பால் கொள்ளும் சினமோ இம்மையில் பழியும் மறுமையில் பாவமும் பயக்கவல்லது. ஆதலின் அதனில் தீயன வேறில்லை என்று கூறுவார்.

வலியார், ஒப்பார், எளியார் என்னும் மூவரிடத்துமே சினத்தை ஒழிக்க. இன்றேல் அச் சினம் ஒன்றால் தீயனவெல்லாம் வந்து சேரும். மனமகிழ்ச்சியையும் முகமலர்ச்சியையும் மாண்டழியச் செய்யும். அதைப் போன்று கேடு விளைக்கும் கொடும்பகை வேறொன்றில்லை. உட்பகையாய் நின்று அருள் முதலிய உயர்பண்புகளை அறவே ஒழித்துவிடும். ஆதலின் ஒருவன் தன்னைத்தான் துன்பம் எய்தாமல் காக்க எண்ணுவானயின் தன் மனத்தில் சினம் எழாமல் காப்பானக. அங்ஙனம் காவானயின் அச் சினம் தன்னையே கெடுக்கும் கடுந்துன்பங்களைக் கொடுக்கும். இதனை உணராது, என்றும் மிக்க சினமுடையவராய் இருப்போர் உயிருடையாராயினும் இறந்தவர்க்கு ஒப்பாவர். அவர்கள் எந்நாளும் ஞானத்தை எய்தார்; வீடு பேறும் அடையார். சினத்தை ஒழித்த செல்வரோ சிறந்த ஞானம் கைவரப்பெற்று வீடுபேறு அடைவது உறுதியாகும். சிலர் தமது ஆற்றலை உணர்த்தும் குணமெனச் சினத்தைக் கொள்ளுவர். அன்னவர் தமது ஆற்றலை இழந்து அழிவது உறுதி.

ஓங்கிய கை நிற்பதில்லை. தரையில் ஓங்கி அறைந்தவன் கை, அத் தரையில் படுவது தப்பாதன்றோ? அது போன்றே சினமுடையார் வலியிழந்து நலிவதும் தப்பாது.

சினத்தை என்றும் மனத்தில் நினையாதவன் பெற விரும்பிய பேறுகள் அனைத்தும் ஒருங்கே பெறுவான். அவனது உள்ளம் அருள் வெள்ளம் பெருகுவதற்கு இடமாகும். அருள் நெஞ்சம் படைத்த அந்த ஞளன் இந்த உலகில் மட்டுமன்றி மறுமையிலும் பெருமையுறுவான். இறுதியில் வீடுபேறு எய்துவா னன்றோ! பல கொள்ளிக் கட்டைகளை ஒன்று சேர்த்துக் கொண்டு வந்து உடம்பில் சுட்டால் போன்ற பெருந் துன்பங்களை அடுக்கடுக்காக ஒருவன் செய்தானுயின், அவன்மீது சினம் சிறிதும் கொள்ளாது இருத்தல் கூடுமோ? எவர்க்கும் எளிதில் கூடாத செயல் இஃது என்பதை வள்ளுவர் ஒப்புக் கொள்ளுகிறுர். அது கூடுமாயின் நன்று என்று நவில்வார்.

'இணரெரி தோய்வன்ன இன்னு செயினும்
புணரின் வெகுளாமை நன்று'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

சைவசமய குரவர் நால்வருள் ஒருவராகிய நாவுக்கரசர் இளமையில் சைவராயிருந்தவர். பல சமய நூல்களையும் ஓதி உணர்ந்தார். சமண் சமய சாத்திரங்களைப் பெரிதும் பயின்றதன் பயனுய்ப் பாடலிபுத்திரம் என்னும் பதி புகுந்து சமணராயினர். அவரது சமண் சமயப் பேரறிவினைக் கண்ட வல்லார்கள் தருமசேனர் என்ற பட்டமளித்துச் சமண் குருவாகத் திகழுமாறு செய்தனர். சமணம் புகுந்து அச்சமய குருவாகவும் நாவுக்கரசர் விளங்குவதை அறிந்த அவர்தம் தமக்கையார் திலகவதியம்மையார், பரசமயப் படுகுழியில் விழுந்த தம்முடைய தம்பியைச் சைவக்கரையேற்ற வேண்டுமெனச் சிவனை அல்லும் பகலும் வேண்டி வழிபட்டார். அதன் பயனுகத்

தருமசேனருக்குக் கொடிய சூலைநோய் ஏற்பட்டது. அவர் நோயினை அகற்றச் சமணர் செய்த முயற்சி வீணாயிற்று. பிணித்துயர் தாங்காத நாவுக்கரசர் திருவதிகை வீரட்டானம் அடைந்து, அங்குப் பணி செய்து கொண்டிருந்த தமக்கையாரின் தாள்களில் விழுந்து பணிந்தார். திருவாளன் திருநீற்றைத் திலகவதியார் நாவுக்கரசர்க்கு நல்கினார். அதனை அணிந்து, வீரட்டானத்தில் விளங்கும் பெருமானை உளமுருகிப் பதிகம் பாடினார். சிவனது அருளால் சூலைநோய் நீங்கப் பெற்றார்.

தருமசேனர் மீண்டும் சைவம் புகுந்தார் என்ற செய்தியை அறிந்த சமணர்கள் தம் அரசனாகிய மகேந்திர பல்லவனிடம் சென்று முறையிட்டார்கள். அவர்மீது இல்லாத பொல்லாத பெரும் பழிகளைச் சுமத்தினர். பல்லவன், நாவுக்கரசரை வரவழைத்தான். நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்ணுமாறு ஏவினான். யானையைக் கொண்டு காலால் இடறுமாறு பணித்தான். ஏழு நாளளவும் நீற்றறையுள் அடைத்து வைத்தான். இறுதியில் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் தள்ளுமாறு கட்டளையிட்டான். இங்ஙனம் பல கொடுமைகளை விளைத்தும் சிவனருள் பெருந்திறத்தால் நாவுக்கரசர் சிறிதும் நலிவடையாது பொலிவுற்று விளங்கினார். இதைக் கண்டு வியந்த பல்லவமன்னன், தான் அறியாது செய்த பிழைகளை உணர்ந்து நாவுக்கரசரை வந்து பணிந்தான். தமக்குப் பல துன்பங்களை விளைத்த பல்லவ மன்னன் அல்லவா இவன்! என்று அவனைக் கடிந்து கொண்டாரோ நாவுக்கரசர்? இல்லையில்லை! அவனையும் அன்புடன் வரவேற்று அருள் செய்து சைவனாக்கினார். அவரன்றோ சினத்தைத் துறந்த சீரருளாளர் இந்த உண்மையை விளக்கப் போந்த சிவஞான முனிவர்,

‘பல்லவர்கோன் வந்து பணியக் கருணைசெய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா—கொல்ல’

இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று'

ஏன்று பாடியருளினர்.

வானுற ஓங்கி வளமுற வளர்ந்த மரமொன்றைக் கோடரி கொண்டு ஒருவன் வெட்டுகிறான். அடிமரத்தையே அடியோடு அற்று விழுமாறு வெட்டுகிறான். அங்ஙனம் வெட்டுவானுக்கு மென்காற்றும் தண்ணிழலும் தந்து நிற்கும் மரத்தின் மாண்பை என்னென்பது! அதுபோலவே குணமென்னும் குன்றேறி நின்ற நல்லார்கள், தமக்குச் சாகும் வரையும் நோவும் துன்பங்களையும் நொடிக்கு ஒன்றாகச் செய்யினும் தாம் உயிர் போகும் வரைக்கும் நன்மையே எண்ணி நன்மையே பண்ணுவர். அஃதன்றோ உயர்ந்த சால்புடைமை!

'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு'

என்பதன்றோ வள்ளுவர் சொல்லமுதம். இக் கருத்தை வலியுறுத்தப் புகுந்த தமிழ் மூதாட்டியார்,

'சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையார்—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்'

என்று பாடியருளினர்.

சிறந்த குணங்கள் நிறைந்த பெரியோர் சிறிதும் சினம் கொள்ளார். அவர் சினம் கொள்வராயின் கணப்பொழுதே அச்சினம் நிற்பதாகும். அச்சிறிதளவு சினத்தையும் அதற்குக் காரணமாயினர் தடுத்தல் இயலாது. வில்லை வளைத்து வெஞ்சரத்தை நீர் கிழியுமாறு விடுத்தாலும் பிளந்த அப்பொழுதே சேர்ந்து கொள்வதைக் காண்கின்றோம். அது போலவே சீரொழு

சான்றோர் சினம் மாறி விடும் என்று கூறுவார் தமிழ் மூதாட்டியார். அடுப்பில் நீரையேற்றிக் காய்ச்சினால் வெப்பம் உடனே விரைந்து பற்றுவதில்லை. மெல்ல மெல்லவே அந்நீர் வெப்பம் கொள்ளுகிறது. வெந்நீரை அடுப்பை விட்டு இறக்கி விட்டால் அதன் வெப்பம் மிக விரைவில் ஆறிவிடும். ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் மனத்தில் மெதுவாகவே சினம் தோன்றும். நீங்கும்போதோ, அச்சினம் விரைவில் நீங்குவதாகும். கீழ்மக்கள் கொள்ளும் கோபம் என்றும் தாழ்வதில்லை. மேன் மேலும் வளர்ந்து பெருகிக் கொண்டே வரும். இவ் உண்மையைச் சமணமுனிவர் ஒருவர் திறம்பட விளக்குகின்றார்.

'நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்காலம் இன்றிப் பரக்கும்—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்'

என்பது அம்முனிவர் மொழி.

இங்ஙனம் தணிக்க வேண்டிய சினத்தைத் தணியாது பெருக்குவான் பேதையாவன். அவனுடன் நட்புக் கொள்ளுதல் பெருங்கேடாகும் என்று மொழிவார் முன்றுறையரையனார்.

'ஆறுச் சினத்தன் அறிவிலன்; மற்றவனை
மாறி ஒழுகல் தலையென்ப'

என்பது அவரது பழமொழி. மனத்தில் கிளர்ந்த சினத்தால் வாயில் கடுஞ்சொல் பிறக்கிறது. பிறர்க்குத் தீங்கு விளைக்கும் கடுஞ்சொல் பேசுதல் தனக்கும் தீராத தீங்காய் முடியும். ஆதலின் 'யாகாவாராயினும் நா காக்க' என்று அறிவுறுத்துவார் திருவள்ளுவர். நாவைக் காவாது கூறும் கடுஞ்சொல் ஒவாது தன்னைச் சுட வல்லது. ஆதலின் அறிவுடைய நன்மக்கள் எக்காலத்தும்

மனத்தில் கொண்ட கோபத்தால் கொடுஞ்சொல் கூற மாட்டார். பிறர் தம்மீது கொண்ட சினத்தால் சிறுசொல் கூறினும் மீட்டும் தம்வாயால் அத்தகைய சிறு சொல்லைச் சொல்லார். நாய், ஒருவனது காலைப் பற்றிக் கடித்து விட்டால் திரும்பவும் அந்நாயைப் பற்றிக் கடிப்பவன் உண்டோ? ஆதலின் நல்லறிவாளர் உள்ளத்தில் சினம் கொள்ளினும் அச்சினத்தைப் புலப்படுத்தும் கடுஞ் சொல்லை என்றும் சொல்லார்.

'காவா(து) ஒருவன் தன் வாய்திறந்து சொல்லும்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து'

என்பது நாலடிப் பாடல்.

முற்றுந் துறந்த முனிவன் தனது தவ வன்மையால் தான் நினைத்தன அனைத்தும் பெற முடியும். அவனது உள்ளத்தே சினம் உண்டாகுமாயின் தான் பெற்ற தவ வன்மை முழுதும் இழந்தழிவான். ஆதலின் வெகுளாமை என்ற பகுதியைத் துறவறவியலில் வைத்து விளக்கு கின்றார். இங்ஙனம் இருவகை அறநெறியில் நிற்பார்க்கும் பெருங் கேட்டை விளைக்கும் சினத்தை விடுத்துக் குணத்தைக் கொள்வதே நலமாகும்.

## ௬. வாய்மையும் தூய்மையும்

வாயினது தன்மை வாய்மை எனப்படும். அதன் இயல்பு உள்ளத்தே உள்ளதை மறையாது உரைப்பதே. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உரை பொய்யானதே. உள்ளத்தின் தன்மை உண்மையாகும். மெய்யின் தன்மைமெய்ம்மையாகும். உள்ளத்தே எண்ணியதைக் கரவாது வாயால் உரைப்பதே வாய்மையாகும். உளத்தொடு பொருந்த உரைத்தவாறே மெய்யால் செயல் புரிவதே மெய்ம்மையாகும். இங்ஙனம் உளம், மொழி, மெய் ஆகிய முக்கருவிகளும் முரண்படாது தத்தம் இயல்பில் நிற்பதே தூய்மை எனப்படும். இதனை முப்பொறித் தூய்மை அல்லது திரிகரண சுத்தி என்பர்.

வடமொழியாளர் சத்தியம் என்று வழங்கிய அறத்தை, நம் முன்னோர் மூக்கூறுபடுத்திய திறம் பாராட்டற் குரியதாகும். உண்மை, வாய்மை, மெய்ம்மை என்ற மூன்றாக்கி, இவை மூன்றும் ஒன்றுபட்டு நிற்றலே உயர்ந்த தூய்மையெனக் கொண்டனர். உலகில் சிலர் உள்ளத்தில் எண்ணுவதை உரைப்பதில்லை. வேறு சிலர் வாயால் கூறியதைச் செய்வதில்லை. தாம் உரைத்தவை பிறர்க்கே என்று பிறழ்ந்து நடக்கும் பேதையரும் உளரன்றோ! ஆதலின் சொல்லும் செயலும் தூய்மைப்படுதற்கு அகத் தூய்மையே அடிப்படை என்பதை வள்ளுவர் நன்கு வலியுறுத்துகின்றார்.

'புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். மக்கள் உடம்பு தூய்மையுறுவது நீராலன்றோ! அது போல உள்ளம் தூய்மையடைவது வாய்மையால் என்பர் வள்ளுவர்.

உள்ளத்தைத் தூய்மை செய்யும் வாய்மைக்கு வள்ளுவர் சொல்லும் இலக்கணம் யாது? பிறிதோர் உயிர்க்குச் சிறிதும் தீங்கு விளையாத சொற்களைச் சொல்லுதலே வாய்மையாகும். கண்ணாரக் கண்டதையும் உண்மையாக நிகழ்ந்ததையும் உரைப்பதெல்லாம் வாய்மையாகாது. அது தானும் தீங்கு விளையாதாயின் வாய்மையின் பாற்படும்; சிற்றுயிர்க்குச் சிறுதீங்கு விளைக்குமாயினும் அது பொய்மை என்றே புறக்கணிக்கப்படும்.

'வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். வாய்மை தீங்கு விளைக்குமாயின் பொய்ம்மையாமெனின் பொய்ம்மை நன்மை விளைக்குமாயின் வாய்மையாவதுண்டோ? ஒருவன் உரைக்கும் பொய்ம்மொழியால் பிறர்க்குக் குற்றமற்ற நன்மை கிட்டுமாயின் அப்பொய்யும் வாய்மையெனப் போற்றத்தகும் என்பர் பொய்யில் புலவர். ஆகவே தீங்கு விளைக்காத நிகழ்ந்ததைக் கூறலும், நன்மை விளைக்கும் நடவாதது கூறலும், மெய்ம்மை எனப்படும். நன்மை விளைக்காத நடவாதது கூறலும், தீங்கு விளைக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்மை எனப்படும்.

ஒருவன் மற்றொருவன்பால் கொண்ட பகைமையால் அவனைக் கொலை செய்தற்குக் கூரிய வாளேந்திய கையனாய்ப் பின் தொடர்ந்து ஓடி வருகின்றான். பகைவனால் விரட்டப்பெற்றவன் வழியிடைக்கண்ட மனைக்கண் புகுந்து அடைக்கலம் வேண்டி ஆங்கொருபால் மறைந்து இருந்தான். பின் தொடர்ந்து வந்த பகைவன், மாற்றான் அடைக்கலம் புகுந்த மனைக்கண் வந்து ஆங்கு இருந்தாரை. 'இப்பக்கமாக ஓடிவந்தவன் எங்குற்றான்?' என்று வினவியபோது, அவனுக்குப் பிறிதொரு வழியைக்காட்டி, அப்பக்கமாகவே விரைந்து ஓடினான் என்று பொய்மொழி கூறி, அவனைப் புறத்தே செலுத்துவது எத்துணை நன்மையை விளைக்கும் செயலாகும்! ஒருவனது இன்னுயிரைக்

காத்த புண்ணியத்தையன்றே அந்தப் பொய்மொழி பண்ணியது. அச்சொல்லை மெய்யென்பதா? பொய் யென்பதா? பொய்யில் புலவராய வள்ளுவரை வினவின் என்ன மறுமொழி அருளுவார்?

'பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்'

என்பதன்றே அவரது சொல்லமுதம்! இதனையே வில்லி புத்தூரார் தமது பாரத நூலுள் ஓரிடத்து வலியுறுத்து கின்றார்.

'மெய்ம்மையே ஒருவர்க் குற்ற
விபத்தினை மீட்கு மாகில்
பொய்ம்மையும் மெய்ம்மை போலப்
புண்ணியம் பயக்கு மாதோ'

என்பது அவ் வில்லியின் சொல்லமுதம்.

வாய்மை அறத்தின் சிறப்பை வலியுறுத்த வந்த வள்ளுவர் பெருமான், மனத்தொடு பொருந்த ஒருவன் உண்மையை உரைப்பானாயின் அவன் தவமும் தானமும் ஒருங்கு செய்யும் உயர்ந்தாரினும் சிறந்தவன் என்றார். மக்கள் புகழுண்டாக மாநிலத்தே வாழவேண்டும். அப் புகழைப் பெறுதற்குப் பலவழிகள் உள. அவற்றுள் வாய்மை பேசுதலும் ஒரு வழியாகும் என்பர். மேலும மெய் வருந்தாமல் மறுமைக்கு எல்லா நலங்களும் இயையுமாறு செய்வது இவ்வாய்மை என்றார். ஒருவன் இவ் வறத்தைத் தனது வாழ்வில் உறுதியாகத் திறம் பெறக் கடைப் பிடித்து ஒழுக வல்லனாயின் அவன் பிற அறங்களைச் செய்யாமையே நன்று என்பதை வற்புறுத்திக் கூறுவார். சான்றோர்க்கு அமைய வேண்டிய அரிய பண்புகளுள் பெரிய பண்பாக இதனையே குறித்தருளினார். அவர்க்கு உளத்திருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கே உயர் விளக்கு என்று போற்றினார்.

'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு'

என்பதன்றோ வள்ளுவர் சொல்லமுதம். கல்வி கேள்வி முதலியவற்றால் அமையும் விளக்கமெல்லாம் விளக்கமாகா. பொய்யாமையால் ஏற்படும் புனித விளக்கமே மெய்யான நிலைத்த புகழைத்தரும் பெருவிளக்கமாகும்.

இத்தகைய வாய்மை என்னும் நல்லறத்தை ஒருவன் தனது வாழ்வில் மேற்கொள்வதால் உலகமே அவனை உவந்து போற்றுகிறது. மக்கள் என்றும் மறவாது போற்றுவர். பண்டை மன்னனாகிய அரிச்சந்திரனை வாய்மைக்கு எடுத்துக் காட்டாக இன்றும் உலகம் கொண்டாடுகிறது அன்றோ! வாய்மை காத்த வள்ளலாகிய அரிச்சந்திரனது பெருமையை வையத்தவரே யன்றி வானத்தவரும் வியந்து போற்றினர். வானவரும் போற்றும் அம் மன்னனது புகழில் பொறாமை கொண்ட கோசிக முனிவன், தேவசபையில் 'அரிச்சந்திரனை ஒரு பொய்யேனும் புகலுமாறு செய்து விடுகிறேன்' என்று வசிட்டனுடன் வஞ்சினம் கூறி வந்தான். தனது சூளுரையை நிறைவேற்றப் பெருமுயற்சி செய்தான் அத் தவமுனிவன். தனது பொல்லாத கடுமுயற்சியால் மன்னற்கு எண்ணற்ற இன்னல்களை உண்டு பண்ணினான்.

வாய்மை காப்பதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட மன்னன் அவற்றையெல்லாம் பொறுமையுடன் தாங்கி நின்றான். நாடிழந்தும் நகரிழந்தும் நன்மகனை இழந்தும் தேடிய பொருளெல்லாம் இழந்தும் அருமை மனைவியைப் பிரிந்தும், தான் இழிதொழில் புரியும் புலையனுக்கு ஆட்படும் பெருந்துயருழந்தான் அம் மன்னன். இறுதியில் அவன் மனைவியாகிய சந்திரமதி, காசி மன்னன் நேச மைந்தனைக் கொலை செய்த பாதகி யெனப் பொய்க் குற்றம் சாற்றப் பெற்றாள். அக் குற்றத் தண்டனையாகக் காசி மன்னன், அன்னவளைக் கொலை

செய்ய ஆணையிட்டான். அதனை நிறைவேற்றும் பணி காசிப் புலையனுக்கு ஆட்பட்ட அரிச்சந்திரன் தலையில் விழுந்தது.

அவன் தன் மனைவியின் கரங்களைக் கயிறு கொண்டு பிணித்துக் கொலைக்களம் நோக்கி இழுத்து வருகிறான். இடைவழியில் குறுக்கிட்டான் கோசிக முனிவன், "அரிச் சந்திரனே! இத்தனை அல்லல்கட்கு ஆளாகியும் ஒரு பொய்யேனும் உரைத்தாயில்லையே. உன் மனைவியைக் கொலை செய்ய, நீயே கொலைக்களம் இழுத்துச் செல்லும் இக் கொடிய சூழ்நிலையிலேனும் பொய்யொன்று புகல்வா யாயின் நீ இழந்தன அனைத்தும் உவந்து கொடுப்பேன்" என்று உரைத்து நின்றான். அது கேட்ட அரிச்சந்திரன், "முனிவரே! எல்லாம் இழந்தாலும் இறுதியாக வீடுபேறு மட்டும் உறுதியாக வாய்க்கும் என்று நம்பியுள்ளோம். அதனையும் இழக்க நேர்ந்தாலும் இவ்வாய்மை யறத்தி னின்று ஒரு பொழுதும் வழுவமாட்டோம்" என்று வன்மையாகச் சொன்னான்.

'பதியி ழந்தனம் பாலனை இழந்தனம் படைத்த
நிதி யிழந்தனம் இனிநமக் குளதென நினைக்கும்
கதியிழக்கினும் கட்டுரை இழக்கிலேம் என்றார்
மதியி ழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான்'

என்பது அரிச்சந்திர புராணப் பாடல். 'கதி இழக்கினும் கட்டுரை இழக்கிலேம்' என்று இயம்பிய காவலன், வாய் மையைக்காக்க எத்துணைக் கடுந்துயருழந்தான்! அங் ஙனம் உள்ளத்தால் பொய்யாது ஒழுகிய உயர்வாலன்றோ இன்று உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் மங்காது ஒளிவீசிக் கொண்டிருக்கின்றான்!

'உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம் அன்றோ

பாரத நாட்டிற்குப் பூரண விடுதலை கிடைக்குமாறு செய்த சுதந்திரத்தந்தை காந்தியடிகள் காத்த பேரறங்கள் வாய்மையும், இன்னா செய்யாமையும் ஆகும். அவற்றையே சத்தியம், அகிம்சை என்று வடமொழியில் வழங்குவர். காந்தியடிகள் இளமையில் அரிச்சந்திர நாடகத்தைக் கண்ணுற்ற நாளிலிருந்து வாய்மை அறத்தைப் பேணிக் காத்து ஒழுகினார். அதனால் இன்று உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் ஒளி வீசும் சுடர்மணி விளக்காயினார். ஆகவே, வாய்மை காக்கும் அறம் வையமெல்லாம் போற்றும் நல்லிசையை யன்றோ உண்டு பண்ணுகிறது. பொய்ம்மொழி ஒருவனது வாழ்வையே பாழ் செய்துவிடும். பொய் சொன்ன வாய்க்குப் போசனம் இல்லை என்பர்.

'பொய் சிதைக்கும் பொன்போலும் மேனியை'

என்பர் விளம்பி நாகனார். ஒருவன் உரைப்பது பொய் என்பதைப் பிறர் அறிவாராயின் அவனை எத்துணையோ அல்லல்கட்கு உள்ளாக்குவர். அதனைப் பிறர் அறியாதொழியின் அவனது நெஞ்சமே சான்றாக நின்று நெடிது வருத்தும். இதனாலேயே தமிழ் மூதாட்டியார் 'நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்' என்று சொல்லிப் போந்தார். இதனை வள்ளுவரும்,

'தன்னெஞ்சு அறிவது பொய்யற்க, பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்'

என்று வலியுறுத்தினார்.

மருதனிள நாகனார் என்னும் பெரும் புலவர் வறுமையுற்று மனைவி மக்களுடன் வாடி நாடு நீங்கிச் செல்கின்றார். வீட்டிலுள்ள பொருள்களைத் தலையிலும் தோளிலுமாகச் சுமந்துகொண்டு வருந்தி வழி நடக்கின்றார்கள். மெல்லியல் நல்லாளாகிய அவரின் மனைவி கல்லிலும் முள்ளிலும் கால் பெயர்த்து நடக்க முடியாது தட்டுண்டு தடு-

மாறி வருகிருள். இடையே கிடக்கும் மலைமீது ஏறி நடக்க இயலாது பெருந்துயருடன் நடந்து வருகின்ருள். அந் நிலையில் புலவர் ஒரு பொய் புகல்வாராயின் தமது வறுமை நீங்கப் பெரும் பொருள் பெற்று வாழலாம். எனினும் அவரது தமிழ் நெஞ்சம் பொய்யுரைக்க ஒருப்பட வில்லை. எத்துணைத் துன்பங்கள் வந்து வருத்திஞலும் வாழ்தல் வேண்டிப்,

'பொய் கூறேன் மெய் கூறுவல்'

என்று தமது உள்ளுறுதியைச் சொல்லுகின்ருர்.

சிலர், பொய்யே புலவர் வாயில்தான் பிறந்தது என்று பேதைமையால் பேசுவர். பொருளுக்காக ஒருவனிடத்து இல்லாத பண்புகளை இருப்பனவாக உரைப்பர் என்பர். கல்லாத ஒருவனைக் கற்ருய் என்று போற்றுவர். காடெறியும் மறவனையும் நாடாளும் மன்னனென நவில்வர். பொல்லாதவனை நல்லவன் என்று போற்றுவர். போர் முகத்தையே அறியாத புல்லனைப் புலியேறு என்று புகழ்வர். நலிந்து மெலிந்து சூம்பிய தோளானைப் பருத்து உயர்ந்த வரைத் தோளான் என்று வாயாரத் துதிப்பர். வழங்காத கையனை வள்ளல் என்று வாழ்த் துவர்; பாரியென்றும் ஓரியென்றும் பாராட்டுவர். ஆதலின் இல்லாதனவற்றைச் சொல்லும் இப் புலவரெல்லாம் பொய்யர் என்று பழிப்பர். அங்ஙனம் பழித் தற்கு உரியரல்லர் பழந்தமிழ்ப் புலவர்கள். குணம் நாடிக் குற்றமும் நாடி. அவற்றுள் மிகை நாடி, மிக்கவை நற்குணங்களாக அமையின் அவற்றைத் தக்கவாறு தலைக்கொண்டு போற்றும் இயல்பினர். பொருள் கருதிப் பொருளற்ற செயலை என்றும் அவர் செய்ய இசையார்.

வன்பரணர் என்னும் பெரும்புலவர், தமது வறுமையைப் போக்க வளமான பொருளைத் தரும் வள்ளலாயினும் அவன் செய்யாத செயல்களைச் செய் ததாகச் சொல்லிப் போற்றும் சிறு செயலைப் பெரிதும்

வெறுத்தார். எனது நா இல்லாத குணங்களை உள்ளன வாகப் பொய்யுரைக்கும் இழிசெயலை என்றுமே அறிந்த தில்லை என்று அறிவுறுத்துகின்றார். அங்ஙனம் பொய் கூறி வாழ விரும்பவில்லை என்பதை மிக்க பெருமிதத் துடன் பேசுகின்றார்.

'பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றுஎம் சிறுசெந் நாவே'

என்பது வன்பரணர் வாய்மொழி.

இத்தகைய வாய்மையறமே தலைசிறந்ததென உலகி லுள்ள பல்வேறு அறநூல்களும் பறைசாற்றுகின்றன என்று வள்ளுவர் பகர்கின்றார். பல்வேறு மொழிகளில் காணும் நன்னூல்கள் பலவற்றையும் தமது தெய்வப் புலமையால் தேர்ந்துணர்ந்த திருவள்ளுவர்,

'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற'

என்று வலியுறுத்தினர்.

## ௬. கொலையும் புலையும்

பிற உயிர்களைக் கொல்லுதல் கொலையெனப்படும். இஃது ஐம்பெரும் பாவங்களுள் மிகவும் கொடியதொன்ரும். இதனைத் திருவள்ளுவர் கொல்லாமை என்ற அதிகாரத்தால் விலக்குமாறு விளக்கி உரைக்கிருர். ஓருயிரையும் கொல்லாதிருப்பது அறங்கள் எல்லாம் ஒருங்கு செய்வதற்கு ஒப்பாகும்; பிறிதோர் உயிரைக் கொலை புரிவது பாவச் செயல்கள் எல்லாவற்றையும் ஒவாது விளைக்கும் ; கொலைப் பாவம் விளைக்கும் துன்பம் பிற பாவங்கள் எல்லாம் கூடினுலும் விளைக்க மாட்டா என்று விளம்புவார்.

'அறவினை யாதெனின் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

கொல்லாமை என்னும் நல்லறத்தின் மாண்பைக் கூற வந்த பழம் புலவர் ஒருவர், யானையின் அடிக்குள் அடங்காத அடியே கிடையாது ; அது போலக் கொல்லாமை அறத்துள் அடங்காத நல்லறம் எதுவும் இல்லை என்று சொல்லிப் போந்தார்.

'ஆனை யடியுள் அடங்கா அடியில்லை
தானதுபோல் நிறகின்ற தன்மைதான்— ஊனுயிரைக்
கொல்லா அறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கும்
எல்லா அறமும் இசைந்து'

என்பது அப்புலவரது உவமை அமைந்த அரியமொழி. மேலும் திருவள்ளுவர் இவ் அறத்தின் சிறப்பினை உறுதியுற விளக்குகின்ருர். ஒருவன் தான் உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்துக் கொடுத்துப் பல்லுயிர்களையும் காத்தல் வேண்டும். அதுவே அறநூல் வகுத்த

அறிஞரெல்லாம் தொகுத்துரைக்கும் அறங்களுள் தலைமை யானது. அதற்கு இணையாக எந்த அறத்தையும் இயம்ப முடியாது. பிறநாட்டினும் பிறசமயத்தும் பிற மொழியினும் தோன்றிய அறநூல்கள் அனைத்தும் வாய்மை யறமே மேன்மையானதென வலியுறுத்தின. ஆனால், தமிழர் தலைக்கொண்டு போற்றத்தக்க தலையாய அறம் கொல்லாமையே என்பதை வள்ளுவர் நன்கு வலியுறுத்துகின்றார்.

'ஒன்றாக நல்லது கொல்லாமை ; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

வாய்மையின் சிறப்பை வலியுறுத்த வந்த வள்ளுவர், பொய்யாமையை ஒருவன் பொய்த்தலின்றிப் போற்றி ஒழுக வல்லனாயின் பிறஅறங்களை அவன் ஆற்றவே வேண்டாம்; யாம் மெய்ந்நூல்களாக இவ் உலகில் கண்டறிந்த நூல்கள் அத்தனையும் வாய்மையைப்போல நல்ல பிறஅறங்கள் இல்லையென்றே சொல்லுகின்றன என்று பலவாறு வற்புறுத்தினர். கொல்லாமையின் சிறப்பைச் சொல்லும்போதோ, 'ஒன்றாக நல்லது கொல்லாமை,' 'பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்த வற்றுள் எல்லாம் தலை' என்றெல்லாம் சொல்லுதல் முன்னுக்குப் பின் முரண்படுமன்றோ! இவ் இரண்டு அறத்துள்ளும் எது சிறந்தது என்ற ஐயம் ஏற்படலாம் அன்றோ! அவற்றை விலக்கும் பொருட்டே மிகவும் கவனமாக 'அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்று கூறிக் கொல்லாமை அறத்தின் உயர்வைப் புலப்படுத்தும் புலவர் திறம் போற்றற்கு உரியதாகும்.

மேலும் வாய்மைக்கு இலக்கணம் கூறிய வள்ளுவர், யாதொன்றுந் தீமையிலாத சொல்லலே வாய்மை என்றார்; புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின் பொய்மையும் வாய் மையெனப் போற்றத்தகும் என்றார். ஆதலின் நிகழாதது

கூறுதலும் நன்மை தந்தால் உண்மையாகவும், நிகழ்ந்தது கூறுதலும் தீமை தந்தால் பொய்ம்மையாகவும் பயனை நோக்கி வாய்மையின் தன்மை இங்ஙனம் மாறுபடும். கொல்லாமையோ அங்ஙனம் மாறுபடுவதன்று. அதனாலேயே பொய்யாமையினும் கொல்லாமை மேலானது என்று குறித்தருளினார். இதனையே சான்றாண்மை என்னும் அதிகாரத்தும்,

'கொல்லா நலத்தது நோன்மை: பிறர் தீமை
சொல்லா நலத்தது சால்பு'

என்று வலியுறுத்தினார். வீடுபேறு அடைதற்குரிய நல்ல நெறி கொல்லாமையைப் பேணியொழுகும் பெருநெறியே. இவ் அறத்தை மறவாது கொண்டொழுகுபவனே துறந்தாருள் உயர்ந்தவன். அவனது வாழ்நாளின்மேல் கூற்றுவன் செல்லான். அதனால் வாழ்வுக் காலம் அவனுக்கு நீட்டிக்கும். அங்ஙனம் நீட்டிக்கவே ஞானம் பிறந்து அவனது உயிர் வீடுபெறும்.

கொலையின் கொடுமையைக்கூற வந்த பேரறிவாளராய வள்ளுவர், கொலை செய்யாதவழித் தன்னுயிர் நீங்கிப் போமாயினும் தான் பிறிதோர் இன்னுயிரை நீக்கும் தொழிலைச் செய்யாதொழிக என்றார். ஒருவனுக்கு முன்னைச் செய்த தீவினைகள் கொலையுண்டவழித் தேய்கின்றன. அவன் கொலை செய்த வழி மேலும் வளர்கின்றன. ஆதலின் 'தன்னை அதுகொல்லினும் தான் அதனைக் கொல்லற்க' என்று சொல்லியருளினார். இரை நாடிச் செல்லும் கடும்புலி யொன்று இளமானைக் கண்ணுற்றது: தனக்கேற்ற இரை கிடைத்ததென மகிழ்ந்து, மானைப் பாய்ந்து பற்றப்போகும் வேளையில் அற நெஞ்சினன் ஒருவன் அக்காட்சியைக் கண்டான். என் செய்வதெனத் திகைத்து நின்றான். புலி வாயினின்று மானைத் தப்புவித்தால் புலிக்குப் பசித்துயர் விளைத்த பொல்லாத பாவம் சூழும். புலியைக் கொன்றாலோ கொடிய கொலைப்பாவம் சூழும். புலியைக் கொல்வதா ? அல்லது

மானைத் தப்புவிப்பதா ? என்ற அறத் தடுமாற்றத்தில் அகப்பட்டு விழித்தான் அந்த அந்தணாளன். இந்த நிலையையே வழக்காற்றில் 'தரும சங்கடம்' என்றும் குறிப்பர். விரைவில் ஒரு முடிவுக்கு வந்து பாயும் வேங்கையின் வாயுள் தான் அகப்பட்டு அதனது அரும் பசிக்கு இரையானான். இதனால், அவனது தீவினை தேய்வதாகும் அன்றோ !

'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி(து)
இன்னுயிர் நீக்கும் வினை'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

மனுச் சோழனுடைய மகனாகிய வீதிவிடங்கன் தேரேறிப் படைகள் புடைசூழ அரச வீதியில் சென்றான். பயமறியாத இளங்கன்று ஒன்று துள்ளி வந்து தேர்க் காலில் வீழ்ந்து இறந்தது. கன்றை இழந்த தாய்ப்பசு கலங்கிக் கண்ணீர் சொறிந்து கதறியது; விரைந்தோடி அரண்மனை வாயிலிற் கட்டிய ஆராய்ச்சி மணியைக் கொம்பால் அசைத்து ஒலியெழச் செய்தது. மணியொலி கேட்ட மன்னன் செய்தி அறிந்து சிந்தை நொந்தான் தனது குலத்திற்கு ஒரே மைந்தன் என்பதையும் மறந்து ஆரூரில் பிறந்த ஓருயிரைக் கொன்ற கொலைப் பாவ திற்குக் கழுவாயே இல்லை; அத் தாய்ப்பசு அடைந் துன்பத்தைப் போன்று யானும் துன்புறுதலே முறை என்று மொழிந்தான். அமைச்சன் ஒருவனை அழைத்து,

'முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கால் ஊர்க'

என்று ஏவினான். அமைச்சனோ 'தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினைக்கு' அஞ்சித் தன்னுயிர் விட்டான். அஃதறிந்த மன்னன் தன் மகனைத் தானே தேர்க்காலிற் கிடத்தினான். அவன் மார்பின்மீது தேரைச் செலுத்திக் கொன்றான். இங்ஙனம் எவ்வுயிர்க்கும் ஒரே நீதி வழங்கிய பெருமன்னனைத் தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான்,

'ஒருமைந்தன் தன்குலத்துக்(கு)
உள்ளான்என் பதும்உணரான்
தருமம்தன் வழிச்செல்கை
கடனென்று தன்மைந்தன்
மருமம்தன் தேராழி
உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி
அரிதோ?மற் றெளிதோதான்.'

என்று தெய்வ மணக்கும் செய்யுளால் வியந்து போற்றுவாராயினர்.

நெஞ்சை அள்ளும் செஞ்சொற் காவியமாகிய சிலப்பதிகாரத்தும் இளங்கோவடிகள், மனுநீதிச் சோழனது செங்கோல் மாண்பைக் கண்ணகி வாயிலாகத் தென்னவன் பேரவையில் தெரிவிக்கின்றார்.

'வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்'

என்பது அவரது இனிய வாக்கு.

திருவள்ளுவரது மறைமொழியினை எடுத்துக்காட்டுடன் விளக்கப் போந்த சிவஞானமுனிவர் தமது சோமேசர் முதுமொழி வெண்பா நூலுள் மனுச்சோழன் வரலாற்றையே எடுத்துப் பொருத்திக் காட்டினர்.

'வேந்துமகன் தேர்க்கால் விடலஞ்சி மந்திரிதான்
சோர்ந்துதன(து) ஆவிவிட்டான் சோமேசா—ஆய்ந்
தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி(து) [துணர்ந்தோர்
இன்னுயிர் நீக்கும் வினை'

என்பது சிவஞானமுனிவர் திருவாக்கு.

வேள்விக்கண் பலியிடுதல் நலமும் செல்வமும் விளைக்கும் என்பர் சிலர். சான்றோர் அங்ஙனம் கொலையால் விளையும் நலத்தையும் செல்வத்தையும் சிறிதும் விழையார் என்பர் வள்ளுவர். 'சான்றோர்க்குக் கொன்றாகும் ஆக்கம் கடை' என்பது அவரது சொல்லமுதம் அன்றோ! கொலைத் தொழிலைச் செய்து பழகினவர்க்கு அத் தொழிலின் இழிவு தெரிவதில்லை. அதன் உண்மையை உணர்ந்தவர் அன்னவரைப் புலையர் என்றே இகழ்வர். உலகில் சிலர் அங்கம் எல்லாம் குறைந்து அழுகு தொழுநோயராய்ப் புழு நெளிந்து யோசனை தூரம் புண் நாறும் பொல்லா உடம்பினராய் வறுமைகூர்ந்து இழிதொழில் வாழ்க்கையராய் இருக்கின்றனரே! அவர்தம் மிக இழிந்த இந்நிலைக்கு உற்ற காரணந்தான் என்ன? வள்ளுவர் இதற்குத்தக்க விடை தருகின்றார். அவரெல்லாம் முற்பிறப்பின்கண் பற்பல உயிர்களைக் கொலை புரிந்த கொடிய பாவிகள் என்று வினைவிளைவுகளை அறிந்த முதறிஞர் மொழிவர் என்று மறுக்க முடியாது மறுமொழி தருகின்றார்.

'உயிருடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

இக் கருத்தைச் சமண முனிவர் ஒருவர் தமது நாலடிப் பாவில் நயம்பட விளக்குகின்றார். ஒருவன் தனது முற்பிறப்பில் நண்டைத் தின்ன விரும்பி, அதன் காலை யொடித்துக் கறி சமைத்துத் தின்றதனாலாகிய பழவினை, அவனது பிற்பிறப்பில் கொடிய தொழுநோயைக் கொடுத்தது. உள்ளங்கை மட்டும் சங்குமணியைப்போல வெள்ளையாய் விளங்க, விரல்களெல்லாம் அழுகி விழுந்து என்றும் நீங்காத பெருந் துயரைத் தந்தது என்றும் பேசினர்.

'அக்கேபோல் அங்கை ஒழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்

அவ்வினைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்'

என்பது அம் முனிவர் மொழி.

சிலர் தமக்கேற்பட்ட பிணியையோ பெருந் துயரையோ போக்கிக் கொள்ளச் சாந்தியாகப் பிறிதோர் உயிரைப் பலியிடுவர். அங்ஙனம் செய்தலும் ஆகாது; அதனால் பின்னைத் தீவினைகளே பெருகும் என்றும் வள்ளுவர் சொல்லுவார். வேட்டவலம் என்ற ஊரை ஆண்ட குறுநில மன்னர் ஒருவர் தம் மனைவியர் இருவர்க்கும் ஏற்பட்ட பெருநோய்களை அகற்ற வேண்டிச் சிறு தெய்வங்கட்குப் பல உயிர்களைப் பலி கொடுத்தார். இதனை அறிந்த அருளாளராகிய இராமலிங்க அடிகளார் அம் மன்னவரைக் கண்டு, அவரின் மனைவியர் பிணிகளை அகற்றி, அவரது கொலைத் தொழிலையும் அறவே ஒழிக்குமாறு செய்தார். அருளே உருவாக அவதரித்த இராமலிங்க அடிகளார், 'கொலை புரிபவன் எத்தகைய உயர் நிலையினனாயினும் அவன் அறிவில்லாத புலையன் என்றே இகழத் தக்கவன்' என்று பெரிதும் கடிந்து பேசுகின்றார்.

'கருவான் நையுற இரங்கா(து) உயிருடம்பைக்
கடிந்துண்ணும் கருத்த னேல்எம்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணாதே'

என்பது அவரது அருட்பா. 'கொல்லாவிரதம் ஒன்றைக் கொண்டவரே நல்லோர்; மற்றையார் யாரோ? அறியேன்; இத்தகைய கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்குமாறு எல்லார்க்கும் சொல்லுவதே எளியேனது இச்சையாகும்' என்று தாயுமானவர் இயம்பினார்.

கொலை செய்து உயிர் நீங்கிய உடம்பை உணவாகக் கொள்வது புலையெனப்படும். புலால் உண்ணுதலே

புலையெனப்பட்டது. இதனைத் திருவள்ளுவர் புலான் மறுத்தல் என்ற அதிகாரத்தால் தெளிவுற விளக்குவார். ஊன் உண்ணும் புலைத்தொழில் கொலைப் பாவத்திற்குக் காரணமாகவும் காரியமாகவும் உள்ளது. கொலைப் பாவத்தைப் பின்னும் உண்டுபண்ணுவதால் புலைத் தொழில் அதற்குக் காரணமாயிற்று. முன்னும் கொலை செய்ததனாலேயே அப் புலால் உண்ணும் புலைத்தொழில் உளதாகி, அக் கொலையின் காரியமாயிற்று. இங்ஙனம் இருபாலும் பெருந்தீங்கு விளைக்கும் புலைத்தொழிலைப் புரிவானிடத்து அருள் அணுவளவும் இராது என்கிறார் திருவள்ளுவர். தனது உடம்பைக் கொழுக்க வைக்கும் பொருட்டுப் பிறிதோர் உயிரின் உடம்பைச் சமைத்து உண்பவனுக்கும் அருளுக்கும் தொடர்பே இல்லை என்று சொல்லுவார்.

'தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி(து) ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

பிறிதோர் உயிரின் உடலைச் சுவைபட உண்டவர் உள்ளம் அவ்வூனையே பெரிதும் விரும்பும். அருளறத்தின் உயர்வையெல்லாம் அவர் அறியார். கொலைக் கருவியைக் கையில் கொண்டவர் அதனால் செய்யத்தக்க கொலை யையே நோக்குவர். அவரைப் போன்றே ஒன்றன் உடல் சுவை உண்டார் மனமும் நன்றாக்காது என்பர் வள்ளுவர். அருள் என்பதற்கு இலக்கணமே கொல் லாமையாகும். கொலை செய்தலோ அருளற்ற மறச் செயலாகும்; அக் கொலையால் வந்த ஊனைத் தின்னு தலோ கொடும்பாவமாகும் என்று கூறுவர்.

"அருளல்ல தியாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்"

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

கொலைப் பாவம் கொன்றவரையன்றோ சாரும்! ஊன் உண்பார்க்குப் பாவம் ஏது? என்று வினவுவார்க்கு விடை தருவார் போல, வள்ளுவர் பல கருத்துகளைச் சொல்லுகின்றார். ஊனை விரும்பி உண்பார் உளராவது கருதியே ஊன் தருவார் கொலை புரிவாராயினர். ஊனுண்டலை எவரும் விரும்பாராயின் விலைக்கு ஊன் தருவார் ஏனோ கொலை புரிவர்? அவர் கொலை புரியாரன்றோ! இவர் புலாலை வாங்குவார் என்ற உறுதியே கொலைஞர் கொலை புரிதற்குக் காரணமாயிற்று. ஆதலின், கொலைப் பாவம் ஊன் தின்பவனையும் சாரும் என்று கூறுவார். கொலை செய்தலால் விளையும் பாவத்தைச் சிறுபஞ்ச மூலம் என்ற நீதி நூலாசிரியர் ஐவர்க்குப் பங்கிட்டு விடுகிறார்.

''கொன்றான் கொலையை உடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்கால்—கொன்றதனை
அட்டான் இடவுண்டான் ஐவரினும் ஆகும்எனக்
கட்டெறிந்த பாவம் கருது''

கொன்றவன், கொலைக்கு உடன்பட்டவன், கொன்றதனை விலைக்குக் கொண்டவன், அப் புலாலைச் சமைத்தவன், அதனை உண்டவன் ஆகிய ஐவரையும் கொலைப் பாவம் சூழும். இன்னவரை விழுங்கிய நரகம் எந்நாளும் பின்னர் உமிழாது என்பர்.

கவியரசராய கம்பர், கொலைப் பாவத்தை அறுவர்க்குப் பங்கிட்டுக் கொடுக்கிறார். கொன்றவன், உடலைத் துண்டம் துண்டமாக வெட்டியவன், அவ்வூனை விலை பகர்ந்தவன், விலை கொடுத்து அதனை வாங்கியவன், இது நன்று, அது நன்று என்று சுவை பாராட்டிச் சொல்லியவன், தின்றவன் என்றிவர் அறுவருமே மீள்கிலா நரகில் வீழ்வர் என்பர்.

''கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து விற்றவன்
ஒன்றிய பொருள்கொடுத் துவந்து கொண்டவன்

நன்றிது என்றவன் நாவில் பெய்தவன்
என்றிவர் அறுவரும் நரகம் எய்துவார்''

புலால் உண்பவரை நோக்கித் திருவள்ளுவர் இரங்கிக் கூறும் மொழி, கற்பவர் கருத்தைத் தொடுவதாகும். புலால் என்பது பிறிதோர் உடம்பின் புண்ணன்றோ! அது தூயதன்று என்பதைப் புலை செய்வார் உணர்கின்றார் அல்லரே! அதன் இழிவை அறிந்தவர் உண்ணமாட்டார் அன்றோ! உயிர் நீங்கிய உடம்பு பிணம் அல்லவா! பிணத்தைக் கறி சமைத்து உண்ணும் பேதைமையை யாதென்பது? தெளிந்த அறிவுடையார் இவ் இழிசெயலைப் புரிவாரோ? என்று இரங்குவார் வள்ளுவர். தமது உடம்பில் புண்ணை எவரேனும் அறுத்துச் சமைப்பரோ? கழுவியன்றோ மருந்திடுவர். பிறிதோர் உடம்பின் செம்புண்ணை வறுத்து வற்றலாக்கித் தின்னல் வெறுத்தற்குரிய செயலன்றோ!

''தம்புண் கழுவி மருந்திடுவர் தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்பர்—அந்தோ
நடுநின் றுலக நயனிலா மாந்தர்
வடுவன்றோ செய்யும் வழக்கு''

என்பர் முனைப் பாடியார்.

கொலையும் புலையும் தவிர்ந்தொழுகுதலாகிய அறம் ஆயிரம் வேள்வி செய்தலினும் மேம்பட்டதாகும். அவ் அறத்தை வழுவாது மேற்கொண்டு ஒழுகுபவனை எல்லா உயிர்களும் கைகுவித்துத் தொழும். கொல்லாமையும் புலால் உண்ணாமையும் ஆகிய இரண்டு அறமும் கொண்டார்க் கல்லது ஒன்றே உடையார்க்கு அதனால் பயனில்லை என்பதை வலியுறுத்த,

''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்''

என்று வள்ளுவர் சொல்லியருளினார்.

## ரு. பணிவும் கனிவும்

மக்கள் தம்மை மிக்க அழகுடையவராக்கிக் கொள்ளப் பற்பல பொற்புடைய அணிகளைப் புனைகின்றனர். மணியும் பொன்னும் மாலையும் சாந்தமும் அணிந்து மகிழ்கின்றனர். இவையெல்லாம் ஆடையின் பின்னரே அழகு தரும் அணிகளாகும். இடையில் ஆடையின்றி எத்தனை அணிகளைப் புனைந்தாலும் அவற்றுள் ஒன்றேனும் அழகை உண்டுபண்ணுவதில்லை. 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்றே பழமொழி வழங்கும். ஆரவாரமான ஆடைகள்கூட மனிதனை மாண்புடையவனாக்கி விடும். 'ஆள் பாதி ஆடை பாதி' என்பர்.

இத்தகைய கருத்துகளை விளக்க வந்த பழமொழியாசிரியர்,

> "அறிவினுல் மாட்சிஒன் றில்லா ஒருவன்
> பிறிதினுல் மாண்ட தெவனும்—பொறியின்
> மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
> அணியெல்லாம் ஆடையின் பின்"

என்று பாடினர். அறிவுச் செல்வத்தைப் பெருத ஒருவன பிற செல்வங்களை எவ்வளவு பெருக்கமாகப் பெற்றிருப்பினும் சிறிதும் பயனில்லை. அறிவே பிற செல்வங்கட்குப் பெருமையளிக்கும் திறமுடையது என்று குறிப்பிட்டனர். இவ்வறிவே அடக்கமாய பணிவைக் கொடுக்க வல்லது.

அறிவைக் கல்வி, கேள்வி, அனுபவம் என்ற மூவகையால் பெறலாம். கல்வியறிவால் மட்டும் ஒருவற்குப் பணிவு உண்டாவதில்லை. கேள்வியறிவும் வாய்க்கப் பெற்றவரே பணிவுடையராய்த் திகழ்வர் என்பார் திருவள்ளுவர். அதுவும் நுட்பமான கேள்வியறிவாக அமைதல் வேண்டும் என்பார்.

'நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

அறிவென்னும் அணியைப் பெற்ற மனிதன் தன்னை மேலும் அணிசெய்ய இரு குணங்களைப் பெறுதல் வேண்டும். அவையே பணிவும் கனிவும் என்பன. ஒருவனது பணிவை அடக்கமெனும் ஒழுக்கத்தாலும் கனிவை இனிய சொல்லாலும் காணலாகும். இவையே ஒருவற்கு அணியென்பர் பெருநாவலர்.

'பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்(கு)
அணியல்ல மற்றுப் பிற'

என்பது அவர்தம் வாய்மொழி.

செல்வத்திலோ அறிவிலோ சிறந்தார் பெரும் பாலோர் செருக்குற்று இருக்கவே காண்கிறோம். அவர்கள்பால் பணிவையோ கனிவையோ காண்பது அரிதினும் அரிதாகும். இவ் இழிநிலையைக் கண்ட தெய்வப் புலவர்,

'எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து'

என்று உரைத்தருளினர். செருக்கின்றி எவரிடத்தும் அடக்கமுடையவனாக நடக்கும் இயல்பு சிறப்புடைய தாகும். செல்வமுடையார்க்கு இப் பணிவு அமையுமாயின் மற்றொரு செல்வமும் பெற்ற சிறப்புடையவராவர். இருவகைச் செல்வரிடத்தும் பணிவு இயல்பாக அமைந்து விடுமாயின் உள்ளக் கனிவைப் புலப்படுத்தும் இனிய சொல்லும் தானாகவே அமைந்துவிடும். பணிவும் கனிவும் பிரிக்க முடியாத கலப்புடைய சிறப்பான பண்புகள்.

பணிவும் கனிவுமாய பண்புகளைப் பெறாத மக்கள் கூரிய பேரறிவைப் பெற்றிருந்தாலும் அவர் மரம்

போல்வர் என்பார் வள்ளுவர். அரம் தானும் கூர்மை யானது. தன்னைச் சார்ந்த பிற பொருளையும் கூர்மை யாக்கும் இயல்புடையது. அதுபோலக் கூரிய பேரறி வாளர் தம்மைச் சார்ந்தவரையும் அறிவினராக்கும் திறமுடையரே; எனினும், மக்கட்பண்பு இல்லாதவராயின் அவரது அறிவால் யாது பயன்

'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்(பு) இல்லா தவர்'

என்பார் வள்ளுவர்.

நல்லொழுக்கங்களுள் ஒன்றாகிய பணிவைத் திரு வள்ளுவர் அடக்கமெனக் குறிப்பிடுவார். மனமொழி மெய்கள் தீநெறிக்கண் செல்லாது நல்லவழியில் செல்லு மாறு செய்வதே அடக்கம் என்பார் பரிமேலழகர். ஆதலின் முக்கருவிகளும் ஒன்றி நின்று காட்டும் பணிவே உயர் வுடையது என்பது புலனாகும். மனத்தில் அமைந்த பணி வென்னும் பண்பை மொழியும் மெய்யுமே பிறர் அறியு மாறு செய்வன. வணங்கிய வாயும் மெய்யும் நுணங்கிய கேள்வியர்க்கே வாய்க்கும். நுண்ணிய கேள்வியறிவால் பண்ணுற நிறைந்த உள்ளமே பிற செயல்களில் காட்டும் பணிவிற்கு உறுதுணையாய் நிற்பது. அதுவே அறிவிற்கு இலக்கணம் என்றும் இயம்புவார் வள்ளுவர். அடங்கி நடத்தலே அறிவாகும் என்ற உண்மையை உணர்ந்து ஒருவன் நடப்பானாயின் அப் பண்பு நல்லோரால் அறியப் பட்டு எல்லையற்ற பெருமையை நல்கும்.

'செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்(து)
ஆற்றின் அடங்கப் பெறின்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம் ஆகும்.

இப் பணிவுதான் இம்மை மறுமைச் செல்வங்களை எளிதின் எய்துமாறு செய்யும். ஆதலின் உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை. அதனை உறுதிப்

பொருளாகக் கொண்டு அழியாமற் காக்கவேண்டும் என்பார் வள்ளுவர். இவ் வொழுக்கத்தை வழுவாமல் காப்பவன் மறுமையில் வானுலகம் பெறுவான். அவனது உயர்ச்சி மலையினும் மாணப் பெரிது என்று புகழ்ந்து பேசுவார்.

பணிந்து நடக்கும் கனிந்த மனமுடைய மக்களை, அறிவிலர் என்று எண்ணி இகழ்ந்து நடக்கும் இயல் பினரும் உளர். அன்னவர் முன்னவரால் எண்ணிய அளவில் இன்னலுற்று அழிவர். நீர் வழியும் மடைத் தலையில் ஓடு மீன் ஓட, உறுமீன் வருமளவும் வாடி யிருக்கும் கொக்கனைய மக்களைக் குறையுடையார் என்று கொள்ளுதல் தகாதன்றோ! ஆதலின்,

'அடக்கம் உடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா'

என்பர் தமிழ் மூதாட்டியார்.

செல்வம், கல்வி, குடிப்பிறப்பு முதலியவற்றால் சிறப்புற்றவர்கள் பணிவுடையவராகவே இருக்கவேண்டும். அதுவே அவர்கள் பெற்ற பெருமைக்கு உற்ற இலக்கண மாகும் என்பதைப் பலவிடத்தும் வள்ளுவர் சொல்லிச் செல்லுவார். பெரியவர்கள் என்றும் எவரிடத்தும் பணிந்தே நடப்பர். சிறியவர்களோ என்றும் எவ ரிடத்தும் செருக்குடனேயே நடப்பர் என்று குறிப்பார்.

'பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

எந்நாளும் தன்னிலையில் தாழாது வாழும் மான வாழ்வைப்பற்றிப் பேசுமிடத்தும் 'பெருக்கத்து வேண்டும் பணிதல்' என்று குறிக்கிறார். செல்வமில்லாது வறுமை யுற்று வாழ்பவன் பெருமிதமாக வாழவேண்டும். 'வறி

ஞர்க்கு அழகு வறுமையில் செம்மை.' ஒருவன் தனது குடிப்பிறப்பின் சிறப்பினைக் காப்பதற்கு, என்றும் தன்பால் பணிவைக் காக்கவேண்டும். இன்றேல் அவனது குடிமை குலைந்து சிறுமையுற்றுவிடும் என்பார் வள்ளுவர்.

'நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு'

என்பது அவரது சொல்லமுதம் ஆகும்.

இத்தகைய பணிவைப் புலப்படுத்தும் கருவியே இனிய சொல்லாகும். உள்ளத்தில் உள்ள உவகையை வெளிப்படுத்தும் சொல்லே இனிய சொல். வெறுப்பைப் புலப்படுத்தும் சொல்லோ வன்சொல் என்று இகழப்படும். விருப்பினைக் காட்டும் இன்சொல்லும் வெறுப்பினைக் காட்டும் வன்சொல்லும் எல்லோருடைய உள்ளத்திலும் இருப்பனவே. இவ் விருசொற்களுள் வாயால் வழங்கத் தக்கது இன்சொல்லே என்பதை மிகவும் எளிய எடுத்துக் காட்டொன்றால் வள்ளுவர் தெளிவுபடுத்தும் திறம் அருமை வாய்ந்ததாகும்.

ஒருவனது கையில் சுவையுடைய கனிகளும் இருக்கின்றன ; சுவையற்ற காய்களும் இருக்கின்றன. அவன் கனிகளை உண்பானே? காய்களை உண்பானே? எவனும் கனிகளைத் தானே உண்ண எண்ணுவான்! அதற்கு மாருகக் காய்களை உண்ணுவானுயின் அவனை மூடன் என்றுதானே மொழிதல் வேண்டும். அஃதேபோல் அறம் பயக்கும் இனிய சொற்களும் மறம்விளைக்கும் கடிய சொற்களும் தன்பால் இருக்க, அன்பால் இன்சொற்களையன்றோ இயம்புதல் வேண்டும்! அங்ஙனமன்றி வன்சொல் கூறுவானை வையத்தோர் மதிப்பரோ! அவனையும் முழுமூடன் என்றுதானே மொழிவர். இதனைத் திருவள்ளுவர் எவ்வளவு எளிதாக விளக்குகின்ருர்!

'இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'

என்பதன்ருே அவரது அமுதமொழி!

வள்ளுவரது சொல்லமுதத்தில் காணும் கனி, காய்களை விளக்கப் போந்த உரையாசிரியராகிய பரிமேலழகர் இன்சொல்லின் உயர்வையும் வன்சொல்லின் இழிவையும் அழகுற விளக்குவார். இனிய கனிகள் என்றது ஔவை யுண்ட நெல்லிக்கனி போல அமிழ்தாவனவற்றைக் குறிக்கும் என்பார். இன்னாத காய்கள் என்றது காஞ்சிரங்காய் போல நஞ்சாவனவற்றைக் குறிக்கும் என்பார். அமுத நெல்லிக்கனி, அவ்வை மூதாட்டிக்கு அரிய நல்வாழ்வை அளித்ததன்றோ! அஃதேபோல் இன்சொல்லும் இனிய வாழ்வை ஒருவற்கு ஈயும். நச்சுக் காயோ ஒருவனது நல்வாழ்வைப் பாழ் செய்துவிடும். அஃதேபோல் வன்சொல்லும் ஒருவனது பெருவாழ்வையே அழித்து ஒழித்துவிடும்.

உள்ளக் கனிவைத் தெள்ளத் தெளியக் காட்டும் இனிய சொல்லிற்கு வள்ளுவர் இலக்கணம் வகுக்கின்றார். வஞ்சனை இல்லாத நெஞ்சத்தில் அச் சொல் பிறக்க வேண்டும். அன்போடு கலந்து சிறக்கவேண்டும். இத்தகைய உண்மை அன்போடு உரைக்கப்படும் சொல்லும் அறத்தினை உணர்ந்தார் வாயில் பிறத்தல் வேண்டும். அதுவே இன்சொல் என்று சொல்லும் தகுதியுடையது. அறமுணர்ந்தார் வாயில் மறந்தும் தீச்சொல் பயில்வதில்லை. அவர்கள் சொல்லின் திறம் ஆய்ந்து நல்லனவே சொல்லுவர். இதனை,

'இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்'

என்னும் பொன்னான மொழியால் புலவர் விளக்கிப் போந்தார்.

ஈதலறமே ஒருவற்கு இணையற்ற புகழைத் தர வல்லது. உள்ளம் உவந்து ஒருவற்கு வேண்டியதொரு பொருளைத் தருதலினும் இன்சொல் வழங்குவது மிக நன்று என்று இயம்புவார் வள்ளுவர். வாயில் இன்சொல்

பிறக்கும்போது, முகம் மலர்ந்து இனியனாய்த் திகழ வேண்டும். அகமும் முகமும் மலர வழங்கும் சொல்லே எல்லோரையும் வயப்படுத்தவல்லது. ஒருவனைச் சேய்மையில் கண்டபொழுதே முகம் மலர்ந்து இனிதாக நோக்கவேண்டும். அவன் அண்மையில் நண்ணியவழி மனத்துடனாகிய இனிய சொற்களைச் சொல்லுதல் வேண்டும். இங்ஙனம் மனமும் மொழியும் கனிந்த செயலில்தான் அறமே விளங்குகின்றது என்று விளம்பினார் வள்ளுவர்.

'முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்'

என்பது அவர்தம் அமுதமொழி.

இன்முகத்தோடு கூடிய இன்சொல், எல்லார்க்கும் இன்பத்தை மிகுவிக்கும் இயல்புடையது. அது கூறுவார்க்கும் கேட்பார்க்கும் பேரின்பம் விளைக்கும் பெருமையுடையது. இன்சொல் பேசுவார்க்கு என்றும் துன்பம் தரும் வறுமை உறுவதில்லை. அவர்கட்குப் பாவங்கள் தேய்ந்து புண்ணியங்கள் வளரும். இம்மைக்கு நீதியையும் உண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் கொடுக்கும். இங்ஙனம் இருமையிலும் பெருமையைத் தரும் இன்சொல்லையே எல்லாரும் பேசுதல் வேண்டும்.

வன்சொல் கூறும் புன்மையாளர்களின் பொருட்டுப் பொய்யில் புலவர் பெரிதும் இரங்குகின்றார். எத்தகையார்க்கும் பிறர் கூறும் இன்சொற்களே இன்பம் தரும் என்பதை ஒருவன் தானும் அனுபவித்து அறிகின்றான். அவனே பிறரிடத்து வன்சொல்லைப் பேசுவானாயின் அவன் அனுபவத்தால் விளைந்த பயன் என்ன? என்று கேட்கிறார் வள்ளுவர். அவ் வன்சொல் பிறர்க்குத் தீங்கு விளைக்குமே என்பதை எண்ணாதவன் மண்ணோ மரமோ என்று சொல்லாமல் கொள்ள வைக்கும் வள்ளுவர் திறத்தை என்னென்பது!

'இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது'

என்பது அவரது சொல்லமுதம் ஆகும்.

தவப்பெருஞ் செல்வராகிய சிவப்பிரகாசர் முழு நிலா ஒளிவீசும் நாளொன்றில் கடற்கரை மணல் மேட்டிலே உட்கார்ந்து கடலையும் வானையும் நோக்கிய வண்ணமாக இருந்தார். வானத்திலே தண்ணொளி பரப்பி வரும் விண்மதியின் வரவினைக் கண்டு கடல் அலைகள் மலைபோல் பொங்கியெழுந்து ஆரவாரித்தன. நேரம் செல்லச் செல்லப் பொங்கிவந்த கடல் அலைகள், அவர் தங்கியிருந்த மேட்டிற்கும் தாண்டி வந்து தாக்கின. பூரண சந்திரனைக் கண்டு பொங்கிக் களித்த கடலின் ஆரவாரத்தை பொழுது புலரும்வரை அவ்விடத்தி லிருந்தே கண்டு மகிழ்ந்தார்.. காலைக் கதிரவனும் உதய மானான். கடல் பழைய நிலைக்குச் சென்றுவிட்டது. இந்த இயற்கைக் காட்சியில் இன்புற்றிருந்த புலவர் பெருமானது புலமை உள்ளத்தில் கவிதைத் தேன் ஊறியது.

கடற் காட்சியை உவமையாக வைத்துக்கொண்டு உலகிற்கு உயரிய உண்மையொன்றை விளக்கினார் சிவப்பிரகாசர். பரந்து விரிந்த பாருலக மக்களெல் லாம் இன்சொல்லாலேயே மகிழ்வர்; வன்சொல்லைக் கேட்டு இகழ்வர் என்பது எவ்வளவு உறுதியாயிற்று! என்று அவர் உரைத்தருளினார்.

'இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரலால் பொங்கும் கடல்'

என்பது அவர் தம் கவிதையாகும்.

இளவேனில் காலத்து இன்பமாகக் கூவும் குயிலின் ஓசை உள்ளத்தைக் குளிர்விக்கும். கழுதை கத்தும் குரலோ காதால் கேட்கவே வெறுப்பாய் இருக்கிறது. குயிலோசை இன்பத்தைக் கொடுக்க அக் குயில் மக்கட்கு ஏதும் உதவவில்லை. கழுதையின் குரல் வெறுப்பை விளைக்கச், சிறு தீங்கும் அது செய்ததில்லை. எனினும் குயிலிடத்து இனிமையும் கழுதையிடத்துக் கடுமையும் இயற்கையாகவே அமைந்துவிட்டன. இதைப் போலவேதான் இன்சொல்லை உலகம் விரும்புவதும், வன்சொல்லை உலகம் வெறுப்பதும் உலகியற்கை என்றும் நீதிவெண்பா நூலார்.

'மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்கடின
வன்மொழியி னால்இகழும் மண்ணுலகம்—நன்மொழியை
ஓதுகுயில் ஏதங் குதவியது கர்த்தபந்தான்
ஏதபரா தம்செய்த தின்று'

என்பது அந் நீதிப் பாடல்.

மனத்தொடு பொருந்தாத இன்சொல்லால் பெருங்கேடே விளையும். இத்தகைய இன்சொல் வஞ்ச நெஞ்சமுடையார் வாயில் பிறப்பதாகும். இங்ஙனம் பேசுவார் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் புல்லர்களாவர்.

'உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்'

என்பார் அருட்பிரகாசர். இத்தகைய கயவர்கள் ஒருவன் முன்னால் நின்று முகத்தால் மலர்ந்து வாயால் நின்ற கல்லும் நெகிழ்ந்துருகப் பேசுவர். அவன் சென்றபிறகு அவனை இழித்துப் பழித்துரைப்பர். இன்ன கொடியோர் வையத்து மக்களையன்றி வானத்துத் தேவரையும் பழித்துப் பேசி விடுவாரோ என்று ஐயுற்ற தேவர்கள். திறந்த கண்ணை இமைத்தலும் ஒழிந்தனர் என்று கற்பனை பெய்தார் முனைப் பாடியார்.

'முன்னின் ருருவன் முகத்தினும் வாயினும்
கல்நின் றுருகக் கலந்துரைத்துப்—பின்நின்று
இழித்துரைக்கும் சான்ருேரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை'

என்பது அவர் காட்டிய அறநெறி:

குணமென்னும் குன்றேறி நின்ற நல்லார் வாயில் இன்சொல் பிறப்பதே இயல்பாயினும் பிறர்க்கு அறவுரைகளை இடித்துரைக்குங்கால் வன்சொற்களும் பிறக்கலாம். அவ் வன்சொற்கள் பிற வன்சொற்களைப் போலாது நன்மையையே விளைக்கும் என்று நவின்றருளினுர் குமரகுருபரர். வெங்காரம் தீயைப் போன்று வெம்மை நிறைந்ததாயினும் உடம்பில் தோன்றும் புண்ணைப் போக்கவல்லது. சிங்கி என்னும் மருந்து அருந்துவதற்குக் குளிர்ந்து இருந்தாலும் உண்டவரைக் கொல்லும் கொடுமையுடையது. இவற்றைப் போன்றே நல்லார் சொல்லும் வன்சொல் நலம் பயக்கும் என்றும் தீயார் கூறும் தீஞ்சொல் தீங்கு விளைக்கும் என்றும் அறிவுறுத்திஞர் அவ் அடிகளார்.

'இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்ஞர்
கனியும் மொழியும் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்தும் கொலும்'

என்பது அவரது நீதிநெறி விளக்கம்.

## கூ. பொறையும் பொறுமையும்

சான்ருேர்க்கு அமையவேண்டிய பண்புகளுள் பொறையும் ஒன்ருகும். இதனைப் பொறுமை என்றும் புகல்வதுண்டு. ஒருவன் தனது அறியாமையாலோ, பிற காரணத்தாலோ மற்றவர்பால் குற்றம் செய்கின்ருன். அப்போது மற்றவரும் அக் குற்றத்தை அவன்பால் செய்யாது பொறுத்துக் கொள்ளல் வேண்டும். அதுவே பொறையுடைமை எனப்படும்.

குற்றமே இல்லாது குணமே உருவாகத் திகழ்பவன் இறைவன் ஒருவனே. மக்களில் குற்றமற்ருேர் எவருமிலர். முழுதும் குணமே நிறைந்த மக்களும் முற்றும் குற்றமே நிறைந்த பெற்றியரும் உலகில் எங்கும் இலர் என்று வள்ளுவரே சொல்லுவார். ஆதலின் ஒருவன்பால் அமைந்த குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்து, மிக்கது கண்டு தக்கவன் என்ருே தகவிலன் என்ருே கொள்ளுதல் வேண்டும் என்பார். நலத்தால் மிக்க நல்லோரிடத்தும் திங்களிற் கறைபோலச் சிறுகுறை இருக்கக் காண்கிருேம். தீமையே வடிவாய்த் திரண்ட தீயவரிடத்தும் ஒருசில நற்குணங்கள் அமைந்துள்ளன. ஆகவே, ஒரு சிறு குற்றமும் இல்லாத நல்லோர் இத் தொல்லுலகில் இலர்.

நெல்லிற்கு உமியுண்டு. நீர்க்கு நுரையுண்டு. பூவிற்குப் புல்லிதழ் உண்டு. உமியைக் கொண்ட குற்றத் திற்காக நெல்லை வெறுத்துத் தள்ளுவார் உண்டோ? நுரைகொண்ட குற்றத்திற்காகத் தண்ணீரை உண்ணுது மண்ணுது ஒதுக்குவார் உண்டோ? புல்லிதழ் பெற்ற குற்றத்திற்காகப் பூவை வெறுப்பவர் யார்? எவரும் இல்லையன்ருே! இவ் உண்மையைப் போன்றே ஒருவன் மற்றவன்பால் காணும் குற்றத்தைப் பொறுத்துக் குணத்தையே குறிக்கொண்டு போற்றும்கொள்கையுடையனாகவேண்டும்

'பிழையிலான் கடவுளன்றி மக்களில்தப்
பில்லாதார் பிறரும் உண்டோ ?
மழையினுமே அசனியுண்டு மதிக்குமோர்
மறுவுண்டு மலர்க்கு முள்ளாம்
கழையினுமே சக்கையுண்டு கனியினும்தோல்
கொட்டையுண்டு கதிக்கும் காம
விழைவினால் மறப்புரிதல் நரர்க்கியல்பா
தலின்அவரை வெறுக்கொ ணாதே'

என்று பிறர் பிழை பொறுத்தலின் அவசியத்தை மாயூரம் வேதநாயகர் விளக்கினார். மாநிலம் செழித்தற்கு மழை பொழியும் மேகத்திடமும் இடியிருக்கக் காண்கிறோம். தண்ணிலவைச் சொரியும் வெண்மதியிடத்தும் களங்கம் ஒன்றைக் காண்கிறோம். நறுமணம் தரும் நண்மலரிடத்தே முள்ளிருக்கப் பார்க்கிறோம். தித்திக்கும் சாற்றைத் தரும் தீங்கரும்பிற்கும் சக்கை இருக்கிறது. சுவை மிகுந்த கனிகளுக்குத் தோலும் கொட்டையும் மேலும் உள்ளும் குற்றமாகப் பற்றியுள்ளன. இவற்றைப் போலவே மக்களிடத்து இயற்கையாகக் குற்றம் குறைவாகவும் மிகுதியாகவும் இருக்கிறது.

நல்லவை எல்லாம் தம் கடனெனக் கொள்ளும் நல்லோர் பிறர் குற்றம் பொறுத்தலும் தம் கடமையெனப் போற்றுதல் வேண்டும்.

'பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
பெரியவர் கடமை போற்றி'

என்று குறித்தருளினார் மணிவாசகர். 'சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம், பெரியோராயின் பொறுப்பது கடனே' என்று குறிப்பிட்டார் அதிவீரராமர். 'சிறியோர் பெரும்பிழை செய்தனராயின் பெரியோர் அப்பிழையைப் பொறுத்தல் அரிது' என்றும் அறிவுறுத்தினார்.

பொறுமைக்கு எடுத்துக் காட்டாக நிலத்தைக் குறிப்பர் புலவர். நிலமோ தெரியவரும் பெருமை உடையது. மிகுந்த திண்மை உடையது. குத்தினாலும் வெட்டினாலும் பொறுத்துக்கொள்ளும் பொறையுடையது. பருவத்திற்கும் முயற்சிக்கும் தக்கவாறு பயனளிக்க வல்லது. இத்தகைய நல்லியல்புகளையுடைய நிலத்தை 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்' என்று குறித்தார் வள்ளுவர். பெரிய இருப்புக்கோல்களைக் கொண்டும் ஆற்றல் மிக்க பொறிகளைக்கொண்டும் எவ்வளவு ஆழமாகத் தோண்டினாலும் அங்ஙனம் தோண்டுவோரை வீழாமல் தாங்கும் தன்மை உடையது அந்நிலம். அதைப் போல ஒருவன், தன்னை இகழ்வாரைப் பொறுத்தல் இணையற்ற அறம் என்று குறித்தார் வள்ளுவர்.

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை'

என்பதன்றோ அவர் சொல்லமுதம்!

திருவள்ளுவர் நிலத்திற்குக் கொடுத்த அடைமொழிகளால் கொள்ளத்தக்க பொருள், பொறையினுக்கே வரம்பு கோலுவதுபோல அமைந்துள்ளது. சாதலைப் போன்று, நோதலைச் செய்யும் துன்பம் வேறொன்றும் இல்லையென்று வள்ளுவரே சொல்லுவார். 'சாதலின் இன்னாததில்லை' என்பது அவர்தம் வாய்மொழி. அத்தகைய சாவைத் தரும் கொலையைப் போன்ற குற்றத்தைச் செய்தவரையும் பொறுத்துப் பாதுகாத்தல் வேண்டும் என்று பொருள் கொள்ளுமாறு வள்ளுவர் காட்டும் உவமை அமைந்துள்ளது.

தமிழ் மூதாட்டியாராகிய ஔவையார் பெருமையுடையார் மேற்கொள்ளும் பொறுமைக்கு ஓர் எல்லையே வகுத்துக் காட்டுகிறார். அவர் மரத்தைப் பொறுமைக்கு எடுத்துக்காட்டாகக் குறித்தார். வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்த மரமொன்றை, ஒருவன் கோடரி கொண்டு

அடியோடு வெட்டுகிறான். அங்ஙனம் வெட்டுவானுக்குக் களைப்புத் தோன்றாத வண்ணம் தண்ணிழலையும் மென் காற்றையும் அம்மரம் உதவுகின்றது. அது வெட்டுண்டு தரையில் வீழும்வரைக்கும் வரையாது அந்த உதவியைச் செய்து கொண்டிருக்கிறது. வெயிலுள் நிற்பான் ஒருவன் வேதனை எய்துமாறு அவன் கால்களை வெட்டு தற்கு மற்றொருவன் வாள் கொண்டு வீசுகின்றான். அவனுக்கு வெட்டப் பெறுவான் குடைபிடித்து நிழல் கொடுத்தலோ, விசிறி கொண்டு காற்றெழுப்புதலோ எங்கேனும் கண்டதுண்டோ? பகுத்தறிவற்ற மரத்தி னிடத்தே அப் பண்பைக் காணுகிறோம். அம் மரத்தைப் போன்றே, சான்றோர் தமக்குப் பிறர் உயிர் நீங்குந் துணையும் பெருந்துயரைச் செய்தாலும் தாம் அவர்க்குத் தீங்கு நினையார்; தம்மால் இயன்ற உதவியைச் செய்து காப்பர். இங்ஙனம் பொறையுடையாரை மரத்தொடு பொருத்திக் காட்டும் தமிழ் மூதாட்டியாரின் புலமைத் திறம் போற்றற்குரியதாகும்.

‘சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்’

என்பது அவ்வையாரின் செவ்வையான மொழி.

ஆன்றமைந்த சான்றோர்க்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர் ‘இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்’ என்று குறித்தருளினார். இவ்வியல்பு அவர்பால் அமைய வில்லையாயின், ‘சால்பு என்ன பயத்ததோ?’ என்று வினவினார். சான்றோர் கடனைக் குறிக்கவந்த சமண முனிவர் ஒருவர்,

‘தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்(று)
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை

எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்'

என்று நாலடி நூலில் நவின்றருளினர். சான்றோர் பிறர் தம்மை இகழ்ந்தால் பொறுத்துக் கொள்வர். அஃதன்றி, 'இவர் எம்மை இகழ்ந்த தீவினைப் பயனால் மறுமையில் மீளா நரகத்தில் வீழுவரே' என்றும் இரங்கி வருந்துவர்.

பிறர் செய்த பெருங்குற்றத்தையும் பொறுத்துக் காத்தால்மட்டும் போதாது. அக் குற்றத்தை மனத்தில் கொள்ளாது அப்பொழுதே மறத்தலும் வேண்டும் என்று குறித்தார் வள்ளுவர். அதுவே குற்றம் செய்தார்க்குக் கொடுக்கும் ஒறுப்பு என்றும் குறிப்பார்.

'இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்'

என்பது அவர்தம் சொல்லமுதம். இங்ஙனம் குற்றம் பொறுக்கும் பொறை, வன்மையுள் வன்மையாகும். ஒருவன் தன்பால் அமைந்த சால்புக்குக் குறை ஏற்படா திருக்கப் பொறையைப் போற்றி ஒழுகவேண்டும் என்பார். பிறர் தீங்கைப் பொறுத்தலின்றி ஒறுத்தாரை அறிவுடையார் ஒரு பொருளாக உள்ளத்தில் கொள்ளார். அதனைப் பொறுத்தாரையோ பொன்போல் பொதிந்து போற்றுவர். ஒறுத்தார்க்கு அதனை செய்த ஒருநாளை இன்பமே உளதாகும். பொறுத்தார்க்குப் பூவுலகம் அழியுமளவும் புகழ் உண்டாம். உலகத்தில் உயர்ந்த புகழையன்றிப் பொன்றுது நிற்பது ஒன்றில்லையன்றோ!

செல்வம், கல்வி, வீரம் முதலியவற்றால் எழுந்த செருக்குக் காரணமாகப் பிறர்க்குத் தீங்கு செய்வார் உளர். அத்தகைய தீங்கைச் சான்றோர் தம் பொறுமையின் பெருமையால் எளிதில் வெல்லுவர் என்பார் வள்ளுவர் 'வெல்வது வேண்டின் வெகுளி விடல்' என்று விளம்பும்

நான்மணிக்கடிகை, 'தீங்கு செய்தார்மேல் சினம்கொள் ளாது பொறுப்பதே அவரை வெல்லுதற்கு நல்லவழி யென்று சொல்லும்.

துறந்தவர் மிகவும் சிறந்தவர். அவரது பெருமையை அளப்பது, உலகில் பிறந்திறந்தாரை எண்ணுவதற்கு ஒப்பாகும் என்பார் வள்ளுவர். அத்தகைய துறந்தா ரினும் பொறுமையுடையார் தூய்மையுடையவர் என்பார். அன்னவர் பெருமையெல்லாம் பொறுமையுடையாரது பெருமைக்குப் பின்னதாகவே மதிக்கப்படும். இல்லறத்தில் இருந்தே பற்றுக்களை விடாமல் பொறுமையுடையவர், பற்றுக்களை விட்டுத் துறவறத்தை அடைந்த பொறுமை யுடையவரினும் பெருமையுற்றவர் அன்றோ!

இத்தகைய பொறுமையுடையார்க்கு ஒருநாளும் துன்பம் உறுவதில்லை என்று உரைத்தது நாலடியார். அறியவேண்டுவன அறிந்தோரே பொறையின் உறை யுளாவர். அவர் அஞ்சுவது அஞ்சி, அருஞ்செயல்களை உலகம் மகிழப் புரிந்துதவுவர். இத்தகைய நற்பண்பு களால் பொறையுடையார் என்றும் இன்புற்று வாழும் இயல்பினர் ஆவர். அவர்க்கு எந்நாளும் துன்பம் ஏற்படுவதில்லை.

'அறிவ தறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்பினர் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது'

என்பது சமண் சான்றோர் ஒருவரின் உறுதிமொழி.

இத்தகைய பொறையினுக்கு மறுதலையான தீய பண்பே பொருமை எனப்படுவது. அதனை அறவே விலக்குதல் வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த விரும்பிய பெருநாவலர் தமது நூலில் பொறையுடைமை என்ற அதிகாரத்தை அடுத்தே பொருமையையும் விளக்கத்

தலைப்பட்டார். வள்ளுவர் இப் பொருமையை அழுக்காறு என்னும் சொல்லால் குறிக்கிறார். இச்சொல் அழுக்கு, ஆறு எனப் பிரிந்து, தீயவழி என்றும் பொருள் தரும். அழுக்கறு என்னும் பகுதி, அழுக்காறு என்று திரிந்து வந்த தொழிற் பெயராகவோ, பண்புப் பெயராகவோ நின்று ஒரு சொல்லாகவும் பொருளைத் தரும். தீய பண்புகளை விலக்கவேண்டும் என்பதை விளக்கும் தெய்வப் புலவர் அப் பண்புகளையெல்லாம் எதிர்மறைச் சொல்லால் குறிக்கும் திறம் வியக்கற்பாலதாகும். அழுக்காற்றை விளக்கப் புகுந்த இப் புலவர் அழுக்காருமை என்றே குறிக்கிறார். இதே முறையில் வெஃகாமை, புறங்கூறுமை, பயனில சொல்லாமை, கள்ளாமை, வெகுளாமை, கொல்லாமை, இன்னு செய்யாமை முதலாய தலைப்புகளை அமைத்திருப்பதைக் காணலாம்.

அழுக்காறு என்பது யாது? அயலார்க்கு உண்டாகும் நன்மைகளைக் கண்டு உள்ளம் பொருதிருத்தலே அழுக்காறு எனப்படும். அதனைச் செய்தல் தகாது என்பதை அதிகாரத் தலைப்பிலேயே குறிப்பிடும் சிறப்பை அழுக்காருமை என்ற சொல்லால் அறிகின்றோம். இவ் அழுக்காற்றை உள்ளத்தில் கொள்ளாத நல்லியல்பை ஒருவன் தனக்குரிய ஒழுக்க நெறியாகக் கொள்ள வேண்டும் என்றார் வள்ளுவர். அப் பண்பினைப் பெற்றவன் ஒப்பில்லாத சிறந்த பேற்றினை உற்றவன் ஆவான்.

பொருமையுடையவன் மறுமைக்கு அறத்தையும் இம்மைக்கு ஆக்கத்தையும் வேண்டாமென்று வெறுப்பவன். அறிவுடையார் இத்தீய எண்ணத்தால் தமக்கு இருமையினும் விளையும் துன்பத்தை அறிந்து பொருமை கொள்ளார். பொருமை உடையார் கேடு அடைவதற்குப் பகைவர் வேண்டா. அத்தீய பண்பே பெருங்கேட்டை விளைப்பதாகும். அவரிடம் திருமகள்தானும் இருக்கப் பெருது. தன் தவ்வையாய மூதேவிக்கு இடமளித்து நீங்குவாள். இருமைத் துன்பமும் ஒருங்கு நல்கும் இத்

தீய பண்பினைப் பாவி என்றே கடிந்துரைத்தார் வள்ளுவர். 'அழுக்காறு என ஒரு பாவி' என்பது அவரது வாய்மொழி. எல்லாப் பாவங்களையும் கொடுக்கும் கொடிய பண்பா தலின் அதனை ஒப்பில்லாத பாவி என்று உரைத்தார். அஃது இம்மையில் ஒருவனது செல்வத்தைக் கெடுத்து மறுமையில் நரகத்திலும் செலுத்திவிடும். அவனே அன்றி அவனைச் சார்ந்த சுற்றமும் அளவிலாத துன்பத்தை அடையும் என்பார்.

'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதன்கண் பொருமை கொள்ளுவானாயின் அவன் இம்மையில் உண்ண உண வின்றி, உடுக்க உடையின்றி எண்ணரிய துன்பங்களை எய்துவான். அவன் செய்த பாவத்திற்கு அவனது சுற்றமும் அத்தகைய துன்பங்களுக்கு உள்ளாகும். இங்ஙனமாயின் அழுக்காறு எத்தனைக் கொடிய பாவமாகக் கொள்ளப்படும்! அதனாலன்றோ வள்ளுவர் அதனைப் பாவி என்றே குறிப்பிட்டார்!

மூவுலகையும் அடக்கியாண்ட மாவலிச் சக்கரவர்த்தி யின் செருக்கை அடக்குதற்குத் திருமால் வாமனனாக வந்தான். அவன்பால் அருந்தவம் இயற்ற மூன்றடி மண் வேண்டி நின்றான். அப்போது மாவலியின் பக்க மிருந்த அசுர குருவாய சுக்கிரன், மாயவன் தந்திரத்தை உணர்ந்து மாவலியின் கொடையைத் தடுத்தான். வள்ளன்மை உள்ளம் படைத்த மாவலியோ சினம் கொண்டு சுக்கிரனைக் கடிந்தான்.

'எடுத்தொரு வருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகிதோ? தகைவில் வெள்ளி

கொடுப்பது விலக்குகொடியோய்! உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்றாய்'

என்று சபித்தான் மாவலிச் சக்கரவர்த்தி. யான் பிறர்க்குக் கொடுப்பதில் பொறாமை கொண்டு தடுக்கும் தகுதியில்லாத புல்லறிவாளனே! நீயும் உனது சுற்றமும் உடுக்க உடையற்று, உண்ண உணவற்று உலேவீராக! என்று கோபத்துடன் சாபமொழி கூறினன்.

நீர் நிறைந்த குளத்தின் கரையிலே நின்ற மாமரத்தில் கனியொன்றைப் பறித்து வாயிற் கவ்விக் கடித்தவண்ணம் குரங்கொன்று குந்தியிருந்தது. அது திடீரென்று கீழ்நோக்கியது. அதனுடைய நிழல் குளத்து நீருள் தெரியக் கண்டது. அங்கே மற்றொரு குரங் கொன்று மாங்கனியைக் கவ்வியிருக்கிறது! அதனையும் நாம் பறித்து உண்ணவேண்டும் என்று பொறாமையுடன் எண்ணியது. உடனே அங்கிருந்தே குளத்துள் குதித்தது இறந்தொழிந்தது. அதுபோலவேதான் பிறர் ஆக்கம் கண்டு பொறாமை கொள்வோர் விரைவில் அழிவர் என்று விளக்கினார் வேதநாயகர்.

'மாங்கனி வாயில் கவ்வி மரத்திடை இருக்கு மந்தி
பாங்கர்நீர் நிழலே வேறோர் பழமுணுங் குரங்கென் றெண்ணித்
தாங்கரும் அவாவில் தாவிச் சலத்திடை இறந்த தொப்ப
நீங்கரும் பொறுமை யுள்ளோர் நிலத்திடைக் கெடுவர் நெஞ்சே!

என்பது அவரது நீதிநூற் பாடல்.

# எ. மறமும் மானமும்

மறம் என்னும் சொல், வீரத்தைக் குறிக்கும்; அறம் என்பதன் மறுதலைச் சொல்லாகவும் அஃது அமையும். அறத்திற்கு மாறுபட்ட மறமோ தீவினை என்று பொருள் படும். வீரத்தைக் குறிக்கும் மறமோ பொருட்சுவை ஒன்பதனுள் ஒன்ருக விளங்கும்.

நகை, அவலம், இழிப்பு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, சமனிலை என்னும் பொருட்சுவை களுள் ஒன்ருகிய வீரத்தைத் தொல்காப்பியர் பெருமிதம் என்று குறிப்பார். யாவரோடும் ஒப்ப நில்லாது மேம்பட்டு நிற்றலின், பெருமிதம் என்ற சொல்லால் அவ் வீரம் குறிக்கப்படுகின்றது. கல்வி, தறுகண், இசை, கொடை என்ற நான்கனுள் ஒன்றன் காரணமாகப் பெருமிதம் பிறக்கும் என்று தொல்காப்பியர் குறிக்கிருர். இவற்றுள் போர்ச் செயலிற் காட்டும் வீரமே தறுகண் எனவும் மறம் எனவும் குறிக்கப்பெறும்.

கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே வாளோடு முற்ருேன்றி மூத்த குடியினர் தமிழர். ஆதலின் தமிழர் என்றும் குன்ருத பெருவீரம் படைத்தவ ராவர். அவரது இணையற்ற வீரத்தைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. புறநானூறு என்னும் தொகைநூல் தமிழர் மறவாழ்வின் திறத்தையே புலப் படுத்துவதாகும். பதிற்றுப்பத்து என்னும் பழந்தமிழ் நூல் சேரமன்னர் பதின்மருடைய வீரவாழ்வை விளக்குவ தாகும். பிற்காலத்துப் போர் வீரத்தைப் புலப்படுத்தும் சிற்றிலக்கியமாகப் பரணி என்பதொரு நூல் எழுந்தது. 'பரணிக்கோர் சயங்கொண்டார்' என்று பாராட்டப் பெற்ற பைந்தமிழ்ப் புலவர் பாடிய கலிங்கத்துப்பரணி தலைமை சான்ற போர் இலக்கியமாகும். கோச்செங்கட்

சோழனுக்கும் சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் நிகழ்ந்த போரைச் சிறப்பித்துப் பொய்கையார் என்னும் புலவர் களவழி நூல் பாடினர்.

தனிப்பட்ட இலக்கியங்களாலும் பாராட்டப் பெற்ற தமிழ் மறவருடைய வீரத்தைத் தெய்வப் புலவர் படை மாட்சி, படைச்செருக்கு என்னும் இரு பகுதிகளால் விளக்குகின்றார். படை என்னும் சொல் 'படு' என்ற பகுதியடியாகப் பிறந்தது. பகைமை கொண்டு எதிர்ப் பாரை அழிக்கும் ஆற்றல் உடையதே படை எனப்படும்.

'கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை'

என்பது வள்ளுவர் சொல்லமுதமாகும். உயிரையும் உடலையும் வேறு வேறாகக் கூறுபடுத்தும் எமனே வெகுண்டு வந்து எதிர்த்தாலும் அஞ்சாது நெஞ்சொத்து எதிர் நின்று தாக்கும் ஆற்றல், படையினுக்கு அமைய வேண்டும் என்பார் வள்ளுவர்.

படை என்னும் சொல் படுவது, படுப்பது என்ற இருபொருளையும் தருவதாகும். படை, தன்னை எதிர்த்த பகைவரை அழித்து வெற்றி கொள்ளவேண்டும். போரில் தோல்வியுறும் நிலை ஏற்படுமாயின் புறங்காட்டாது உயிரைப் போக்குதல் வேண்டும். இவ்விரண்டு இயல்பு களும் உடையதே படை என்பதை அச் சொல்லே வலி யுறுத்துகின்றது.

நாடாளும் வேந்தர்க்கு போரில் ஊறுபடுதற்கு அஞ்சாத வீரமுடைய வெல்படை அமையவேண்டும். அப் படையே அரசருடைய செல்வங்களுள் தலைமை யானது என்பார் வள்ளுவர். அத்தகைய படைவீரர் வழிவழியாக வரும் மறவர் மரபினராக இருக்கவேண்டும் அவர்கட்குத்தான் தொலைவிடத்தும் உலைவஞ்சா வலிமை உளதாகும். மானமும் மாண்ட வழிச் செலவும் மன்னரால்

தேறப்படும் தேற்றமும் அன்னவர்க்கே அமையும். இப் பண்புகளே சிறந்த படைக்கு அரணாகும்.

'மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு'

என்பார் வள்ளுவர்.

படை மறவர் உயர்ந்த தோற்றப் பொலிவு உடையவ ராகவும் இருக்க வேண்டும். பகைவரை அழிக்கும் ஆற்றலும் அவரது எதிர்ப்பைத் தாங்கும் ஆற்றலும் குறைந்திருப்பினும் மறவர் தம் தோற்றப் பொலிவு ஏற்றத்தைத் தருவதாகும். அதுவே பகைவர்க்கு அச்சத்தையும் விளைக்கவல்லது. வீரர்களுடைய உள் ளத்தில் வெறுப்புணர்ச்சியும் வாழ்வில் வறுமையும் தோன்றலாகாது. அவர்களை முன்னின்று நடத்தும் மொய்ம்புடைய தலைவர்களும் வேண்டும். இவையெல்லாம் ஒருங்கமைந்த படைவீரரே வெல்படை வல்லார் ஆவர்.

தமிழ் மறவரது தலைசிறந்த வீரத்தை வள்ளுவர் படைச்செருக்கு என்னும் பகுதியில் தெளிவுறச் சொல்லு வார். பகைவரை வெகுண்டு நோக்கிய விழிகள் அவர் வேலைக்கொண்டு எறிய அஞ்சி இமைத்தலும் செய்யார். அங்ஙனம் இமைப்பது பகைவர்க்குப் புறங்கொடுப்ப தாகும் என்று எண்ணுவர். போரில் பகைவருடைய படைகளால் முகத்தினும் மார்பினும் படும் புண்களை விழுப்புண்களென விரும்பியேற்பர். அவைகளை வீரத் திருமகள் முத்தமிட்டளிக்கும் முத்திரைகள் என்றெண்ணிச் சித்தம் குளிர்வர். அத்தகைய விழுப்புண்படாத நாட் களைப் பயனின்றிக் கழிந்த வீழ்நாட்களென எண்ணி வருந்துவர். பகைவர்பால் வஞ்சினம் கூறி, அது தப்பாது வெல்ல முற்படுவர். அவ்வஞ்சினம் தவறுதிருக்கத் தமது உயிரையும் போக்குவர். தம்மைப் புரந்த தலைவர்கள் கண்ணீர் சொரிந்து வருந்துமாறு போரில் இறந்தொழி

வதைச் சிறந்த பேறெனக் கருதுவர் நினைந்து இன்புறுவர். அத்தகைய இறப்பு, இறந்தாயினும் கொள்ளும் தகுதியுடையது என்பார் வள்ளுவர்.

மறவர் பலர்க்குத் தலைவனாயினான் ஒருவனது வீரத்தைத் தமிழ் வீரன் ஒருவன் வாயிலாகத் திருவள்ளுவர் வெளிப்படுத்துகின்றார். 'பகைவர்களே! எங்கள் தலைவன் எதிரே போரேற்று வாராதீர்கள்! அவன் வேல்வாய் வீழ்ந்து மாய்ந்து கல் நாட்டப்பெற்ற வீரர் பலராவர். நீங்கள் உடலோடு உயிர்வாழ விரும்பு வீராயின் இவ்விடத்தினின்று ஏகுங்கள்! இன்றேல் உங்கட்கும் உறுதியாகக் கல் நாட்டவேண்டிவரும்' என்று கூறினான் அவ் வீரன்.

'என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம் ஆகும்.

பரந்த வெளியிடத்தில் சினந்து நின்ற யானையின் மீது வீரனொருவன் வேலை வீசினான். அந்த வேல் குறி தவறிக் கீழே வீழ்ந்தது. அதனைத் தாங்கிய வீரன் ஒருபால் விளங்கினான். அடர்ந்த காட்டின்கண் ஓட்டமாகச் சென்ற குறுமுயலைக் குறி தப்பாது அம்பெய்து கொன்றான் மற்றொரு வீரன். அவன், தான் கொன்ற குறுமுயலை ஒருபால் தாங்கி வில்லேந்தி நின்றான். இவ்விரு வீரருள்ளே சிறந்தான் யாவன்?

'கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது'

என்பது வள்ளுவர் சொல்லமுதம் ஆகும். குறி தப்பாமல் முயலை எய்து கொன்ற அம்பைத் தாங்குவதினும் வெள்ளிடை நின்ற வெங்களிற்றை எறிந்து பிழைத்த வேலைத் தாங்குதலே பெருமையைத் தருவதாகும்.

ஒருவனது குறிக்கோள் உயர்ந்ததாக இருக்க வேண்டும். அதனை நிறைவேற்ற இடையருத பெரு முயற்சியும் இருத்தல் வேண்டும். அதனால் விளைவது தோல்வியானும் அத் தோல்வி குற்றமாகாது என்று கூறுவார் வள்ளுவர்.

'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல், மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து'

என்பதன்றோ அவரது சொல்லமுதம். குறிக்கோளும் முயற்சியும் கொள்ளாதவனே குற்றமுடையவன். பயனைத் தரும் நல்லூழ் இல்லாமை எவர்க்கும் பழியாகாது. செயல் முயற்சியில்லாமையே பழியாகும் என்று பகர்வார் வள்ளுவர்.

யானையை வேட்டையாட விரும்பிக் காட்டகம் புகுந்த வீரன் சிலவேளைகளில் யானையையும் பெறுதல் கூடும். காடை முதலான சிறு பறவைகளை நாடிச் சென்றவன் சிலவேளைகளில் அவற்றையும் பெருமல் வறிதே திரும்பலாம். ஆதலின் மக்களது நோக்கம் உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்று புலவர் ஒருவர் அறிவுறுத்தினர்.

'யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே'

என்பது அப் புலவர் மொழியாகும். 'விண்ணில் குறி வைத்துச் சுடுகின்றவன் தவறினலும், மரத்தில் குறி வைத்துச் சுடுபவனைவிட உயரமாகவே சுடுவான்' என்று ஜீயார்ஜ் ஹெர்பர்ட்டு (George Herbert) என்னும் அறிஞர் குறிப்பிட்டார். இதனலும் 'யானை பிழைத்த வேல் பிடித்தல் பெருமையளிப்பதே' என்னும் வள்ளுவர் கருத்து வலியுறுவதாகும்.

பகைவரிடம் சிறிதும் இரக்கம் காட்டாமல் செய்யும் மறத்தை, அறிஞர் பேராண்மை என்று குறிப்பர். அப்

பேராண்மைக்கும் கூர்மையளிக்கும் சீர்மையான செய லொன்று உண்டு. போரில் தம்மை எதிர்த்த பகைவர்க்கு ஒரு தாழ்வு வருமாயின் அதனை அவர் போக்கிக்கொள்ள, அருள் நோக்கம் செய்தல் வேண்டும். அஃது ஊராண்மை என்று உரைக்கப்படும்.

'பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு'

என்பது வள்ளுவர் சொல்லமுதம் ஆகும்.

அடுத்த போர்தொறும் தொடுத்து வெற்றி மாலையே புனைந்த வீரர் தலைவனாகிய இராவணன், வில்லில் வல்ல இராமனுடன் புரிந்த முதற் போரிலேயே தனது படைகள் யாவும் பட்டொழிய நின்றான். குடையும் கொடியும் தேரும் முடியும் இழந்து வருந்தித் தலை கவிழ்ந்து நின்றான். வில்லும் அம்பும் இன்றி வெறுங் கையனாய் வெட்குற்று நின்றான். கால் விரலால் நிலம் கீறி நின்ற அவனது நிலையைக் கண்டு இரங்கினான் பெருந்தகையாகிய இராமன். அவனை நோக்கி, "அறத் தினால் அன்றி, மறத்தினால் அமர் வெல்லுதல் அமரர்க்கும் அரிதாகும். இதனை உள்ளத்தில் உறுதியாகக் கொள்ளு வாய். பாவியே! உன் ஊரிலுள்ள உறவினருடன் சேருதற்கு விரைந்து செல்லுவாய். இப்பொழுதே என் கையால் இறந்திருப்பாய்! உன் தனிமையைக் கண்டு இரங்கி, யான் அங்ஙனம் செய்ய எண்ணிலேன். உனக்குத் துணையாக உற்ற படைகளும் பிறவும் பெருங்காற்றினால் தாக்கப்பெற்ற பூளைப்பூவென போயினமை கண்டா யன்றே! இன்று போய்ப் போர் செய்தற்கு நாளை படை யுடன் வருவாய்!" என்று அருளுடன் இன்மொழி கூறினான். இத்தகைய இராமனது அருண்மொழிகளை விளக்கும் கம்பநாடரது கவிதைகள் கற்று இன்புறற் பாலனவாகும்.

'அறத்தி னாலன்றி அமரர்க்கும் அரும்பகை கடத்தல்
மறத்தி னாலரி தென்பது மனத்திடை வலித்தி

பறத்தி நின்றெடும் பதிபுகக் கிளையொடும் பாவி
இறத்தி யானது நினைக்கிலன் தனிமைகண் டிரங்கி'

'ஆளை யாஉனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.'

இங்ஙனம் அறம் திறம்பாத தமிழர் மறத்திறனை இராமன்பால் கம்பர் ஏற்றிக் கூறினர்.

பழந்தமிழ் மறவர் போரில் புறங்காட்டுவது என்பது எந்நாளும் இல்லை. வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் நிகழ்ந்த பெருபோரில் சோழன் கரிகாலனை எதிர்த்த பெருஞ்சேரலாதன் தன் மார்பில் வேல் தைத்து உருவப் பெற்றான். அதனால் முதுகில் உண்டான புண்ணும், தோற்றோடியுற்ற புறப்புண்ணாகும் என்று எண்ணினன். அந் நாணத்தால் வாளோடு வடக்கிருந்து உயிர் நீத்தான். இச் சேரமன்னனது வீரம் மானம் தவறாத மாண்புடையதாகும்.

முதுகுடிப் பிறந்த மகளிரும் சிறந்த வீர வாழ்க்கையராய்த் திகழ்ந்தனர். உடம்பிலுள்ள நரம்பெல்லாம் மேலெழுந்து தோல் திரைந்த முதியவள் ஒருத்தி, தன் மகன் போரில் புறங்கொடுத்து ஓடினன் என்று சிலர் உரைக்கக் கேள்வியுற்றாள். உடனே அவள், 'ஐயோ! எனது மறக்குடியின் மானம் மாண்டொழிந்ததே! என் செய்வேன்!' என்று துடித்தாள். கையில் வாளுடன் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டாள். என் மகன் போரில் புறங்காட்டியது உண்மையாயின், அவனுக்குப் பாலூட்டிய என்னுடைய மார்பகங்களை அறுத்தெறிவேன் என்று வஞ்சினம் கூறினள். போர்க்களம் புகுந்து, தான் கைக் கொண்ட வாளினால் ஆங்குக் கிடந்த பிணங்களைப் புரட்டி உருட்டிப் பார்த்தாள். அவற்றிடையே தன் மகனது பிண

மானம் என்பது யாது? எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமே மானமெனப்படும். இதனையும் பேராண்மை என்றே வள்ளுவர் குறிப்பார்.

'சீரினும் சீரல்ல செய்யாரே சீரோடு
பேராண்மை வேண்டு பவர்'

என்பது அவர் சொல்லமுதம். சிறந்த குடியில் பிறந்தவர் புகழையும் மானத்தையும் நிலைநிறுத்த விரும்புவர். அவர் புகழைச் செய்யுமிடத்து மானம் அழியும் செயல்களை மனத்திலும் கொள்ளார். மலை போன்ற மாண்புடையோரும் மானம் குன்றுதற்குக் காரணமாகிய செயலை ஒரு குன்றியளவாயினும் செய்வராயின் தாழ்வர் என்று குறித்தார். மானம் அழிய வந்தவிடத்து இறவாது ஊனோம்பும் வாழ்க்கை, பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ? என்று கேட்பார் வள்ளுவர்.

கவரிமான் தன் உடம்பில் உள்ள மயிர்த்திரளில் ஒரு மயிர் உதிர்ந்தாலும் உயிர் வாழாது. அதுபோல உயர் குடிப் பிறந்த நல்லார் உயிர் நீங்கத் தாம் மானம் எய்தும் எல்லைவரின் அதனைத் தாங்காது இறப்பர். பின்னும்போவதாய உயிரை நீத்தேனும் எந்நாளும் நிற்பதாய மானத்தைக் காப்பர். இக்கருத்தை,

'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்'

என்னும் வள்ளுவரது வாய்மொழி இனிது விளக்கும். இதனை, 'மானம் நோக்கின் கவரிமான் அனைய நீரார்' என்னும் கம்பரது மொழியும் நன்கு வலியுறுத்தும்.

மக்கள் தலைக்கண் உள்ள மயிரை அணிசெய்ய அரும்பாடு படுவர். நறுமணத்தைலங்களைப் பூசி, நன்றாக வாரிப் பேரழகு செய்வர். மகளிரோ, தம் கூந்தலை மலரானும்

வுடலையும் கண்டாள். அவன் பகைவனது வேலால் இரு கூறுகச் சிதைந்து கிடப்பதைக் கண்டாள். அவனைப் பெற்ற நாளினும் பேருவகை கொண்டாள்.

மற்ருெரு வீர மகள், முதல்நாள் போரில் தன் கணவனை இழந்தாள். அதற்கு முன்னுள் நிகழ்ந்த போர்களில் தமையன்மாரையும் இழந்துவிட்டாள். பின்னும் போர் முரசின் முழக்கத்தைக் கேட்டுப் பெரு வீரம் கொண்டாள். தன் குடிக்கு ஒரு மகன் போர் புரியச் செல்லவேண்டுமென விரும்பினுள். தனக்கிருந்த ஒரே தனிமகனை அருகழைத்தாள். அவனது குடுமியில் எண்ணெய் நீவி இடையில் வெள்ளாடை உடுத்திக், கையில் வேலினைக் கொடுத்தாள். 'மகனே! செருமுகம் நோக்கிச் செல்க!' என விடுத்தாள். அவளது உறுதி யான மறத்தை என்னென்று உரைப்பது! இத்தகைய மானம் குன்ருத மறத்தைப் பேணி வந்தனர் தமிழ் மறவர்.

மறவர்களேயன்றிப் பிறரும் மானத்தைப் பேணக் கடமைப் பட்டவர். 'மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிது' என்ருர் பூதஞ்சேந்தனர். காட்டுப் பசுவைக் கொன்ற கடும்புலி, அப் பசு தனக்கு இடப்பக்கமாக விழுமாயின் அதனை உண்ணுது அகலும். அது போலவே விழுமியோர் தம் மானம் கெட வரும் வானரசையும் விரும்பார் என்று நாலடி நூல் நவின்றது.

'கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணு திறக்கும்—இடமுடைய
வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மானம் அழுங்க வரின்'

என்பது அந் நாலடிப் பாடலாகும். பகுத்தறிவற்ற விலங்காகிய வேங்கையும் மானமுடைய மறத்தையே விரும்புகிறது.

மானம் என்பது யாது? எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமே மானமெனப்படும். இதனையும் பேராண்மை என்றே வள்ளுவர் குறிப்பார்.

'சீரினும் சீரல்ல செய்யாரே சீரோடு
பேராண்மை வேண்டு பவர்'

என்பது அவர் சொல்லமுதம். சிறந்த குடியில் பிறந்தவர் புகழையும் மானத்தையும் நிலைநிறுத்த விரும்புவர். அவர் புகழைச் செய்யுமிடத்து மானம் அழியும் செயல்களை மனத்திலும் கொள்ளார். மலை போன்ற மாண்புடையோரும் மானம் குன்றுதற்குக் காரணமாகிய செயலை ஒரு குன்றியளவாயினும் செய்வராயின் தாழ்வர் என்று குறித்தார். மானம் அழிய வந்தவிடத்து இறவாது ஊனோம்பும் வாழ்க்கை, பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ? என்று கேட்பார் வள்ளுவர்.

கவரிமான் தன் உடம்பில் உள்ள மயிர்த்திரளில் ஒரு மயிர் உதிர்ந்தாலும் உயிர் வாழாது. அதுபோல உயர் குடிப் பிறந்த நல்லார் உயிர் நீங்கத் தாம் மானம் எய்தும் எல்லைவரின் அதனைத் தாங்காது இறப்பர். பின்னும்போவதாய உயிரை நீத்தேனும் எந்நாளும் நிற்பதாய மானத்தைக் காப்பர். இக்கருத்தை,

'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்'

என்னும் வள்ளுவரது வாய்மொழி இனிது விளக்கும். இதனை, 'மானம் நோக்கின் கவரிமான் அனைய நீரார்' என்னும் கம்பரது மொழியும் நன்கு வலியுறுத்தும்.

மக்கள் தலைக்கண் உள்ள மயிரை அணிசெய்ய அரும்பாடு படுவர். நறுமணத் தைலங்களைப் பூசி, நன்றாக வாரிப் பேரழகு செய்வர். மகளிரோ, தம் கூந்தலை மலரானும்

மணப் பொருளானும் அணி செய்து மகிழ்வர். கருமயிர் நரைக்காத வண்ணம் காப்பதற்கு எத்தனையோ மருந்துகளைத் தேடித் திரிவர். இத்துணை அருமையாகப் பேணப்படும் தலைமயிர், அதற்குரிய இடத்தை விட்டுக் கீழே விழுந்து விடுமாயின் அதனை மதிப்பார் யாவர்? அது போலவேதான் மானம் இழந்த மக்களும் அறிவுடையோரால் பெரிதும் இகழப்படுவர்.

'தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை'

என்பது அக்கருத்தை விளக்கும் வள்ளுவர் சொல்லமுதம் ஆகும்.

ஒருவன் தன்னை இகழ்வார் பின்னர்ச்சென்று நிற்பது மானம் இழந்த செயலாகும். அந்நிலை, இவ்வுலகத்திலும் அவனுக்குப் புகழ் பயவாது; வானுலகத்தும் அவனைச் செலுத்தாது. அங்ஙனம் ஒருவன் உயிர் வாழ்தலினும் அதனைச் செய்யாது இறந்தான் என்று சொல்லப்படுதல் நன்றாகும். கல்தூண் பெரும் பாரத்தையும் தாங்கும் வல்லமையுடையது. அதனால் தாங்க முடியாத அளவு பெரும் பாரத்தை அதன்மீது ஏற்றினால் அத்தூண் தளர்ந்து வளைந்து கொடுப்பதில்லை. அது பிளந்து உடைந்து சிதைந்து விடும். அதனைப் போன்றே மானத்தைப் பெரிதென மதிக்கும் மறவர், தம்மினும் வலியின் மிக்க பகைவரைக்கண்டு பணியமாட்டார். மானம் அழிய நேர்ந்தால் உயிரை நீக்கி உயர் மானத்தைக் காப்பர்.

'உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும் பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்'

என்பது அவ்வையாரின் அமுதமொழியாகும்.

சோழன் கோச்செங்கணுனுக்கும் சேரமான் கணைக்கால் இரும்பொறை என்பாற்கும் கழுமலம் என்ற இடத்தில் கடும்போர் நடந்தது. போரில் சேரன் தோல்வியுற்றுச் சோழனுல் சிறை செய்யப்பெற்ருன். சிறைக் கோட்டத்தில் அடைக்கப்பெற்ற சேரன் தனது மானமுடைய வீரம் குலைந்ததை நினைந்து கலங்கினுன். ஒருநாள் நீர் வேட்கையால் வருந்திய அச் சேரன் சிறைக் காவலரிடம் சிறிது நீர் வேண்டினுன். சிறைக் காவலர் சேரனை மதியாது இகழ்ந்து பேசினர். அவரது இகழ்ச்சியைக் கண்டு இதயம் பொருத சேரன், அக் காவலர் கொணர்ந்து கொடுத்த நீரையும் பருகாது உயிர் நீத்து மானத்தைக் காத்தான். அவன் உயிர் நீங்குங்கால் ஏடு ஒன்றில் எழுதிவைத்த அரிய பாடல் அவனது மானத்தின் வழுவாத மறத்திறனை நன்கு புலப்படுத்துவதாகும்.

‘குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே’

என்பது சேரமான் கணைக்காலிரும்பொறை துஞ்சும்போது சொல்லிய செஞ்சொல் பாடலாகும்.

‘பிள்ளை இறந்து பிறந்தாலும் தசைப் பிண்டமாக உருப்பெருது பிறந்தாலும் அவற்றையும் வாளால் வெட்டியே புதைக்கும் வீர மரபினர் சேரர் ஆவார். அம் மரபில் பிறந்த யான் பகைவர் வாளால் பட்டொழியாது சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாயைப்போலச் சிறையில் அடைபட்டுத் துயருற்றேன். இங்ஙனம் மானம் இழந்தும்

வயிற்றில் தோற்றிய தீயை ஆற்றவேண்டிப் பகைவர் பால்; இரந்து பெறும் தண்ணீரை உண்ணக் கடவேனே அத்தகைய ஒருவனைச் சேர மன்னர் பெறுவார்களோ இவ்வுலகில்!' என்று வீரமொழி கூறியவண்ணம் உயிர் நீத்தான். தனது மரபின் மானத்தைக் காத்தான் இத்தகைய மானம் குன்றாத மறமே தமிழர் என்றும் தலைக்கொண்டு போற்றியதாகும்.

புணர்ச்சி என்பது ஒரு நாட்டினராதல் என்று உரைப்பர் பரிமேலழகர். பழகுதல் என்பது பலகால் கண்டும் சொல்லாடியும் மருவுதல் என்பர். உடன் உயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பே உணர்ச்சியொத்தல் என்று உரைப்பர். இவற்றுள் புணர்ச்சியால் தோன்றும் நட்பினை நோக்குவோம் ஒரே ஊரில் தோன்றி வாழ்ந்த உரிமைபற்றிக் கொள்ளும் நட்பும், ஒரே தெருவில் பிறந்து வாழ்ந்த உரிமைபற்றிக் கொள்ளும் நட்பும், ஒரே நாட்டில் பிறந்த உரிமைபற்றி உளதாய நட்பும் ஆகிய எல்லாம் புணர்ச்சி என்ற வகையைச் சார்ந்தனவேயாம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் தம்முள் நட்புடையராய் ஒருங்கு இருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்னும் கவிஞர் பெருமான் கண்ணுற்றார். இரு பெரு நாட்டு முடிகெழு வேந்தரும் தமிழகம் என்னும் ஒரே நாட்டினர் என்னும் புணர்ச்சியால் பொருந்திய நட்பைக் கண்டு வாயார வாழ்த்தினார் 'நீவிர் இருவீரும் ஒருவர்க்கொருவர் உதவி, நட்பு மாறாது ஒழுகுவீராயின், இந் நிலவுலகு முற்றும் நும் கையகப்படுவது பொய்யாகாது. ஆதலின், .

'இன்றே போல்கநும் புணர்ச்சி, வென்றுவென்(று)
அடுகளத் துயர்கநும் வேலே, கொடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே'

என்று வாழ்த்தியருளினார்.

பலகால் ஒருவரைக் கண்டும் உரையாடியும் பழகிய காரணத்தால் உளதாகும் நட்பு மற்றொரு வகையானது. பாரியும் கபிலரும் பலகால் பழகிய காரணத்தாலேயே ஆருயிர் நண்பர் ஆயினர். நக்கீரரும் பிற சங்கப் புலவர்

களும் தம்முள் பலகால் பழகிய காரணத்தாலேயே ஒருவரை ஒருவர் பிரிதற்குப் பெரிதும் வருந்தினர். ஒரு நாள் பழகினும் பெரியோர் நட்புப் பெரிதும் வேரூன்றி விடும். நூறு ஆண்டுகள் பழகினும் மூர்க்கர் தம் நட்பு நீர்க்குள் பாசியைப்போல் வேர்க்கொள்ளாது என்று விளம்புவார் அதிவீரராமர்.

'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். இதனாலேயே சங்கத் தலைவராகத் திகழ்ந்த நக்கீரர், மற்றைய புலவர்களைப் பிரிய நேர்ந்த காலை,

'ஒன்றுயிர்த் துணையாம் சங்கத்(து)
உறவை எப்பொழுது காண்பேம்'

என்று ஏங்கினார்.

உணர்ச்சியொத்தல் காரணமாக உண்டாகும் நட்பே ஒப்பற்றது என்பது வள்ளுவர் உள்ளம். இதனை விளக்க, உரையாசிரியராகிய பரிமேலழகரே, கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சி யொப்பது என்று குறிப்பிட்டார். கோப்பெருஞ் சோழன் சோழ நாட்டை உறையூரில் இருந்து அரசாண்ட பெருமன்னன். பிசிராந்தையார் பாண்டிய நாட்டிலுள்ள பிசிர் என்ற ஊரில் வாழ்ந்த பெரும் புலவர். ஆந்தை என்பது அவரது பெயர். பிசிர் என்னும் ஊர்ப்பெய ருடன் சேர்த்துப் பிசிராந்தையார் என வழங்கப்பெற்றார். இவர் அறிவு நிரம்பிய மனைவியையும் மக்களையும் தம் கருத்தின்படி குறிப்பறிந்து ஒழுகும் ஏவலாளரையும் உடையவர். தமது ஊரில் வாழும் சான்றோர் பலருடன் பழகியொழுகும் பண்புடையவர். வேற்று நாட்டவராகிய இவர், கோப்பெருஞ் சோழனைப்பற்றிக் கேள்வியுற்றார். அவனின் உயர்குணங்களைப் பலகால் நினைந்து உள

முருகினுர். அவனை ஒருபொழுதும் கண்டு பேசிப் பழகா திருந்தும் அவனிடத்து உயிர்நட்புப் பூண்டார். அவன் பால் தாம் கொண்ட அன்பு உரிமையால் தம் பெயரைப் பிறர்க்குச் சொல்லும்பொழுது, 'என் பெயர் சோழன்' என்று அவன் பெயரைத் தம் பெயராகச் சொல்லும் இயல்புடையராய் இருந்தனர்.

கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரது பெருந் தமிழ்ப் புலமையையும் அருங்குண நலன்களையும் கேள்வி யுற்ற நாள் முதல் அவரை உள்ளத்தே ஆருயிர் நண்ப ரெனக் கொண்டு மகிழ்ந்தான். பலகால் அப் புலவரை நினைந்து அகம் குழைந்தான். அவன் வடக்கிருந்து உயிர் நீக்க முற்பட்டபோது, 'என் நட்பாளராகிய பிசிராந்தையார் இப்போது என் நிலைமையைத் தெரிந்து விரைந்து இங்கு வந்து சேருவார்' என்று தன்னுடன் இருந்த அருந்தமிழ்ச் சான்ருேர்க்கு உறுதி தோன்ற உரைத்தான். அங்ஙனமே சோழன் வடக்கிருந்த செய்தியைக் கேள்வியுற்ற பிசிராந்தையார், 'எம் ஆருயிர் நண்பனுடன் யாமும் வடக்கிருந்து உயிர்நீப்பேம்' என உறுதிபூண்டு, சோழன் இருந்த இடத்தை வந்தடைந் தார். தாமும் அவனுடன் உயிர் நீத்தார். இவரது நட்பின் பேராற்றலைக் கண்டு வியந்த பெருந்தமிழ்ச் சான்ருேர் பலவாறு பாராட்டினர். கோப்பெருஞ் சோழ னுடன் வடக்கிருந்த பிசிராந்தையாரைக் கண்ட கண்ண கனுர் என்னும் கவிஞர், 'சான்ருேர் சான்ருேரைக் கூடி யொழுகுவர், சாலார் சாலார் பாலராவர்' என்று கட்டுரைத்தார். இதனையே தமிழ் மூதாட்டியாரும்,

'நற்ருமரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்'

என்று விளக்கியருளினுர்.

முக்காரணத்துள் எக்காரணத்தால் நட்பு ஏற்படுமாயினும் அந் நட்பால் இன்பம் பெருகுவதும் துன்பம் அருகுவதும் இயற்கை. நல்லவர் நட்பே என்றும் நலம் பயப்பதாகும். அதுவே மேன்மேலும் பெருகி வளர்வதாகும். பண்புடையார் நட்பு, பிறை நிறையும் தன்மை போல நாள்தோறும் பெருகி வளரும். அதுவே கற்குந்தோறும் கற்றார்க்கு இன்பம் விளைக்கும் அரிய நூலைப் போலப், பழகுந்தோறும் பெருகிய இன்பம் விளைக்கும் என்பர். இக் கருத்துகளை நாலடியாரும் நயமுற விளக்கும்.

'பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு'

என்பது நாலடிப் பாடல்.

மேலும், கற்றறிந்தார் நட்பு, கரும்பை நுனியிலிருந்து தின்னுதற்கு ஒப்பாகும்; சிற்றினத்தார் நட்பு, கரும்பை அடியிலிருந்து தின்னுதற்கு ஒப்பாகும் என்று செப்பும். கரும்பை நுனியிலிருந்து கறித்துச் சுவைத்துக் கொண்டே வந்தால் அதன் சுவை பெருகுதலைக் காண்போம். அதனை அடியிலிருந்து கறித்துச் சுவைத்துவரின் இனிமை, செல்லச் செல்லக் குறைந்து வருதலைக் காண்போம். அஃதேபோல் நல்லவர் நட்புச் செல்லச் செல்ல இன்பம் சிறக்கும்; அல்லவர் நட்புச் செல்லச் செல்ல இன்பம் சிறிதுமின்றித் துன்பம் பெருக்கும் என்று நாலடி நூல் நவிலும்.

நட்பின் இலக்கணம் யாது? இதனைத் திருவள்ளுவர் நான்கு பாக்களில் நன்கு விளக்குகிறார். அன்புடைய நண்பரைக் கண்டபோது, அகமலர்ச்சியின்றி முகமலர்ச்சி யொன்றே காட்டி நட்குமது நட்பு ஆகாது. அன்பால் அகமும் மலர நடக்குமதே நட்பாகும் என்பர். கேடு

விளைக்கும் தீநெறிகளில் நண்பர் செல்லுங்கால் அவரை விலக்குதல் வேண்டும். நன்னெறிகளில் செல்லாக்கால் அன்னவரைச் செலுத்தவேண்டும். அவர்க்குத் தெய்வத்தால் கேடுவரின் அது விலக்கலாகாமையின் அதனை உடனிருந்து அனுபவிக்க வேண்டும். நண்பர்க்குத் துன்பம் வந்தால் அப்பொழுதே சென்று உதவி அதனைக் களையவேண்டும். எக் காலத்தும் அந் நட்பில் வேறுபடாது விரும்பிப் பழகவேண்டும். நண்பர் அறம் பொருள்களில் தளர்ந்தவிடத்து அத் தளர்ச்சி நீக்கி அவற்றின் கண் நிறுத்தவேண்டும். அங்ஙனம் நிறுத்துதல் நட்பின் முடிந்த எல்லை என்பது வள்ளுவர் கருத்து.

கற்றவர் அவைக்கண் நிற்றலுடையாற்கு ஆடை அவிழுமாயின் அப்பொழுதே விரைந்து கைசென்று உதவி, ஆடையைக் கட்டும். ஆடை அவிழ்ந்ததை மூளை அறிதற்கு முன்பே கை தெரிந்து கட்டுதல் போல, நண்பனுக்குத் துன்பம் வந்ததை அவன் அறிதற்கு முன்பே விரைந்து சென்று விலக்குவதே உயர்ந்த நட்பிற்கு இலக்கணமாகும்.

'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

நண்பர் மூவகைப்படுவர். தலையாய நண்பர் பனையைப் போன்ற பண்பினர். இடையாயார் தென்னைக்கு இணையாவர். கடையாயார் கமுகனையர். இங்ஙனம் ஒப்புமைப் படுத்தி உரைக்கும் நாலடி நூல். பனங்கொட்டையினை நிலத்தில் இட்ட ஞான்று இட்ட உரமும் ஊற்றிய நீருமே சார்வாக நீண்டு வளர்ந்து பயன் தரும். அதைப்போன்று தலையாய நட்பினர் முதல் நாள் அன்பு செய்த அளவிலே பண்பறிந்து அந் நட்பினைப் பெருக்கி வளர்ப்பர். தென்னைக்கு இடையிடையே பக்குவம் செய்தாலன்றிப் பயனளிக்காது. அதைப்போன்று இடையாய நட்பினர்க்கு இடை

இடையே உதவி செய்தாலன்றி அவரது நட்புப்பெருகாது. முக மரத்திற்கு நாள்தோறும் பக்குவம் செய்தாலன்றி அது மிக்கோங்கி வளராது. அதைப் போன்று கடையாய நட்பினர்க்கு என்றும் ஏதேனும் உதவி செய்து கொண்டே இருத்தல் வேண்டும். அங்ஙனமன்றி, உதவி இடையே நின்றொழியின் அன்றே அவர் தம் நட்பும் அகல்வதாகும்.

பாகன், யானையிடத்துப் பன்னெடுங்காலம் பழகினும் அவ்யானை, பாகனைக் கொல்லும் பொல்லாத இயல்புடையது. அதனைப்போன்று தீயவர் பால் எத்துணைக் காலம் பழகினாலும், எத்தனை நன்மைகளை அவர்க்குச் செய்தாலும் நண்பர்க்குத் தீங்கே விளைத்து நிற்பர். நாய்க்கு உணவூட்டி வளர்த்த தலைவன், அதன்மீது வேலைப் பாய்ச்சினும் அவ் வேல் தனது மெய்யில் இருக்க, வாலைக் குழைத்துத் தனது நன்றி உணர்வைக் காட்டி நிற்கும். அந்நாயைப் போன்று, தம்மை நலியினும் அன்பு காட்டும் செம்மையில் குன்றாத நண்பரே சிறந்தவர் என்பர். இதனாலேயே பாரதியாரும்,

'வாலைக் குழைத்து வரும் நாய்தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா'

என்று பாடியுள்ளார். ஆதலின் யானை அனையவர் நட்பைத் தள்ளவேண்டும்; நாயனையார் நட்பைக் கொள்ளவேண்டும் என்று சொல்லும் நாலடி நன்னூல்.

'பேயோடாயினும் பிரிவரிது' என்பது பழமொழி. ஒருவனோடு நட்புச் செய்தபின் அந்நட்பினின்று நீங்குதல் அரிது. அங்ஙனம் வேற்றுமையின்றி நட்புக் கொள்வதால் அவன்கட் பழிபாவங்கள் நண்பரையும் சாரும். ஆதலின் ஆராயாது நட்புச் செய்வது போலக் கேடு தருவது பிறிதில்லை என்பார் பெருநாவலர்.

'கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ளல் அரிது'

என்று சொல்லும் நாலடி நூல். ஒருவனை நண்பனாக ஏற்றுக் கொள்ளற்கு முன் அவனது குணமும் செய்கையும் நல்லவோ அல்லவோ என்பதைப் பலகால் ஆராய்தல்வேண்டும்; பல வழிகளால் ஆராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து நட்புக்கொள்ளாவிடின் முடிவில் தான் சாதற்கு ஏதுவாய துன்பத்தை அந் நட்பே விளைப்பதாகும். தகுதியற்ற ஒருவனை நட்புச் செய்தால் பின்பு அவன் பகையாலேயே அழிய நேரும். ஆதலின் ஒருவனது குணம், குற்றம், குடிப்பிறப்பு, குறைவற்ற சுற்றம் இன்னவற்றையெல்லாம் எண்ணி ஆராய்ந்தே நட்புக்கொள்ளவேண்டும் என்பார் வள்ளுவர். சுற்றப்பிணிப்புடையார் நண்பரோடும் பிணிப்புண்டு வருவராதலின் ஒருவனது சுற்றத் தொடர்பைப் பற்றியும் உற்று நோக்குதல் வேண்டும் என்று உரைத்தருளினர்.

ஒரு சிலர் நட்பைப் பொருள் கொடுத்தேனும் பெறுதல்வேண்டும் என்பார் திருவள்ளுவர். அத்தகையார் யாவர்? சிறந்த குடியில் பிறந்து பழிக்கஞ்சும் பண்புடையார் நட்புப் பலநலம் விளைப்பதாகலின் அவர் விரும்புவதொன்றனைக் கொடுத்தேனும் அன்னார் நட்பை அடைதல் வேண்டும். தாம் தகாத செயல்கள் செய்யக்கருதினால் சிந்தை நொந்து வருந்துமாறு கூறி விலக்கியும், தகாத செயல்களைச் செய்தக்கால் பின்னும் செய்யாத வகையில் இடித்து உரைத்தும், தக்க நற்செயல்களைச் செய்யாதவழிச் செய்விக்கவும் வல்ல நல்லாரையும் ஒருவன் தானே நாடிப் பொருள் கொடுத்தாயினும் அவர் நட்பைப் பெறுதல் வேண்டும்.

வேறு சிலர் நட்பைப் பொருள் கொடுத்தேனும் விலக்குதல் வேண்டும். அன்னவர் யாவர்? இன்பக் காலத்துக் கூடியும், சிறு துன்பம் சேர்ந்ததாயினும் அன்றே அகன்றும் செல்வாரது நட்பை அறவே

ஒருவன் ஆடித்திரிந்து அரும்பொருளை ஈட்டும் நாளில் எல்லோரும் உறவினர் என்று சொல்லி அவனைச் சூழ்வர். உறவும் நட்பும் உயர் வானத்து மீனினும் பலவாகப் பெருகிவிடும். அவன் ஒரு சிறு இடர் எய்திடினோ அவ் இடருற்றவேளையில் தொடர்புடையோம் என்று சொல்லுவார் சிலரே என்பர் சமண முனிவர்.

'காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனில் பலராவர்—ஏலா
இடரொருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட
தொடர்புடையேம் என்பார் சிலர்'

என்பது அம் முனிவர் அருளிய மொழி.

இத்தகைய இழிந்த நட்பினரை 'அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்' என்று சொல்லுவார் வள்ளுவர். போர் வாராத முன்னெல்லாம் வீரனைத் தாங்குவது போன்று, போர் வந்தபோழ்து அப் போர்க்களத்திலேயே வீரனைக் கீழே வீழ்த்துப் போகும் புரவியை ஒப்பாரது நட்பினும் தனித்திருப்பது சிறப்புடைத்து. இத் தீ நட்பாளர் சொல்வதொன்று செய்வதொன்றாகவே இருக்கும். ஆதலின் இவர் தொடர்பு, நனவின்கண்ணே அன்றிக் கனவினும் நனிதுன்பம் விளைப்பதாகும். இவர்கள் மனைக்கண் இருக்கும்போது மகிழ்ந்து உரையாடுவர். பலர் கூடிய மன்றில் சென்று சேர்ந்தால், தம் நண்பரைப்பற்றி ஒன்றேனும் நன்று உரையார், பழித்துரைப்பார். இவர்கள் நட்புச் சிறிதும் சேர இடம் தரலாகாது என்பர் வள்ளுவர்.

'எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு'

என்பது அவர் சொல்லமுதம்.

மகளிர் மனம் ஒருநிலை உறுவதில்லை. அஃதேபோல் தீநட்பாளரும் உற்றார் போன்று நடிப்பர்; பற்றலராய்ப்

பெருங்கேடு விளைப்பர். இவர்கள் கண்ட பொழுது கனித்த முகங்காட்டிக் களிப்பாக உரையாடுவர். நெஞ்சத்து வஞ்சமே நிறைந்து ஒழுகுவர்.

'புறம்நட்(டு) அகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேருதல் வேண்டும்'

என்பார் குமரகுருபரர். உடம்பில் தோன்றிய புண்ணைக் கருவி கொண்டு அறுத்தேனும் மருத்துவம் செய்து ஆற்றுதல்வேண்டும். அப் புண்ணை, நமது உடம்பைச்சார்ந்ததே என்று எண்ணிப் பொதிந்து வைத்தால் புழுத்து நாறி உடலையே அழித்துவிடும் அன்ரே! ஆதலின் கூடா நட்பினராய வஞ்சரை அஞ்சி அகலுதல் வேண்டும். இன்றேல் இவர்கள் உட்பகையாயிருந்தே உயிர்க் கேடு விளைப்பர்.

காமமும் வெகுளியும் காரணமாகவே பகைமை விளைகின்றது. மனத்தால் மாறுபட்டு ஊறிழைக்கும் எண்ணமே பகைவர்பால் என்றும் பெருகி நிற்கும். நேராக எதிர்நின்று தம் எண்ணத்தை நிறைவேற்ற இயலாத இழிஞர் வஞ்சித்து ஒழுகுவர். நட்பாளர் போன்று நடித்து உட்பகையாய் ஒழுகி நிற்பர். தமது பகைமை உணர்ச்சிக்குப் பயன் விளையும் காலத்தை எதிர் நோக்கியே பொய்ந்நட்பாடுவர். அங்ஙனம் வஞ்ச நட்பினராய் ஒழுகும் உட்பகைஞரால் விளையும் கேடு அறிந்த பகைவரால் அடையும் கேட்டினும் பெரிதாகும். மெய்ப்பொருள் வேந்தரை அற்றத்தில் வெல்ல வந்த முத்தநாதன் பொய்த்தவ வேடம் புனைந்து வந்தானன்ரே! அவன் போரில் நேராக எதிர்த்து நின்று வென்றி காண முடியாமையால் வஞ்சகமாக மெய்யெலாம் நீறு பூசி, வேணிகள் முடித்துக்கட்டி முனிவனைப்போல் வந்து நினைத்ததை முடித்தான். அவனது சொல் இனியதாக இருப்பினும் மெய்ப்பொருள் வேந்தர்க்கு உயிர்க் கேட்டையன்ரே விளைத்தது? ஆதலின் 'சொல் வணக்கம் ஒன்ஞர்கண் கொள்ளற்க' என்று சொல்லுவார் வள்ளுவர்.

'இனியவர் என் சொலினும் இன்சொல்லே இன்னர்
கனியும் மொழியும் கடுவே'

என்று கூறுவார் குமரகுருபரர்.

இங்ஙனம் உட்பகையாய் ஒழுகும் நட்பாளர்கள் தொழுத கையுள்ளும் படைஒடுங்கும் என்று உரைப்பார் வள்ளுவர். முத்தநாதன் முனிவன் வடிவில் வந்தனனாயினும் கையினில் படை கரந்த புத்தகக் கவுளி ஏந்தியன்றோ மெய்ப்பொருள் வேந்தரைக் காண வந்தான்? ஞானநூல் இருப்பதாகக் கூறிய பையுள் கூர்ங்கத்தியன்றோ இருந்தது! உலகம் போற்றும் உத்தமராய காந்தியடிகளைக் கொல்லுதற்கு வந்த கோட்சே என்பானும் அப்பெருமானது அருந்தொண்டனைப் போன்றன்றோ பன்னெடுநாள் பழகி வந்தான்! இறைவழிபாட்டிற்கு எழுந்தருளிய அடிகளாரைத் தலைவணங்கிக் கரங்கூப்பி நின்றனனாயினும் அவனது கையுள் கைத் துப்பாக்கியன்றோ மறைந்து இருந்தது? 'ஒன்னார் தொழு கையுள்ளும் படை ஒடுங்கும்' என்ற பொய்யில் புலவரது பொய்யாத மொழி, இவ் இருபதாம் நூற்றாண்டிலும் மெய்யானதைக் கண்டு உலகமே நடுங்கியதன்றோ! அப் பகைவர் அழுத கண்ணீரும் அத்தகைய கொடுமையுடையது என்பர் திருவள்ளுவர். அவர்கள், நம் துயர் கண்டு வருந்தி அன்புடையார் போன்று கண்ணீர் பொழிவர். அதனை உண்மையென நம்பிக் கண்ணீரைக் கையால் துடைப்பினும் அதனைத் தீண்டிய கையே கரிந்து சாம்பராகும். அத் துணைக் கொடியர் உட்பகையாய நட்பாளர் என்பர்.

இத்தகைய பொய்ந்நட்பாளருடன் நாமும் பொய்யாகவே நட்புடையார் போன்று நடிப்பதில் குற்றமில்லை. புறத்தே அவர் மகிழும் வண்ணம் செய்து அகத்தில் அந் நட்புச் செத்தொழியுமாறு செய்வது அரசநீதி என்று போற்றுவர் பொய்யில் புலவர்.

## கூ. பெரியரும் சிறியரும்

உலக இயற்கை இருவேறுபட்ட இயல்பை உடையது. ஆண்மையும் பெண்மையும், அறிவும் அறியாமையும், ஒளியும் இருளும், வெம்மையும் தண்மையும், செல்வமும் வறுமையும், வலிமையும் எளிமையும், பெருமையும் சிறுமையும், நட்பும் பகையும் ஆகிய பல்வேறுபட்ட மாறுற்ற இயல்புகளை இவ்வுலகில் கண்டு வருகின்றோம். இறைவனையும் அம்மையப்பனாகக் கண்டு மகிழும் முறையே தமிழரிடையே பண்டு தொட்டு இருந்து வருகின்றது. இவ் உண்மையைத் தெய்வப் புலவராகிய திருவள்ளுவரது,

> 'இருவே(று) உலகத் தியற்கை; திருவேறு
> தெள்ளிய ராதலும் வேறு'

என்ற தெள்ளமுத வாக்குத் தெள்ளிதின் விளக்கும்.

பெரியரும் சிறியரும் தம்முள் மாறுபட்ட இயல்பினர். இவ்விரு திறத்தினரும் உலகில் உளராயினும் பெரியர் சிலராகவும் சிறியர் பலராகவுமே இருக்கக் காண்கிறோம். அதற்கும் காரணம் வள்ளுவரே சொல்லியருளுவார்.

> 'இலர்பல ராகிய காரணம், நோற்பார்
> சிலர்;பலர் நோலா தவர்'

என்பது அவர்தம் சொல்லமுதம். முன்னைத் தவமே ஒருவரைப் பெரியராக்கும் பெற்றியது. தவமின்மையே ஒருவரைச் சிறியராக்கும் தன்மையது. தவத்திறனால் அருஞ்செயல் ஆற்றுபவரே தகுதியுடைய பெரியார். அது செய்ய இயலாதார் சிறியராவர். அவர்தம் செயலைக் கொண்டே தகுதி வேறுபாட்டை அறியலாம் என்பர் வள்ளுவர்.

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்'

என்பது அவர்தம் சொல்லமுதம்.

ஒருவர் பெருமை பெறுதற்கு இரு காரணங்கள் உள. ஒன்று குடிப்பிறப்பு; மற்ருென்று தொழில் சிறப்பு. வாழையடி வாழையாக வரும் சிறந்த குடியில் பிறப்பதே பெருமை. ஆனல், அக் குடிப் பிறப்பிற்குப் பொருந்தாத தீயொழுக்கங்கள் சேருமாயின் அச் சிறப்பு அகல்வதாகும். இதனையே, 'பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்' என்று பேசுவார் வள்ளுவர். சிறந்த குடியில் பிறந்தாரிடத்து இயல்பாகவே உயர்ந்த பண்புகள் அமைந்திருக்கும். கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுபடாத செம்மையும், பழி பாவங்கட்கு அஞ்சும் நாணமும் அவர்க்கு இயல்பாக அமைந்தவை. இவை அமைதற்குக் கல்வியறிவு, அன்னுர்க்குத் தேவையில்லை. அவர்கள் வறியாரை மலர்ந்த முகத்துடன் என்றும் வரவேற்பர்; தம்பால் உள்ளனவற்றைக் கரவாது உவந்து ஈவர்; அன்பு கனிந்த இன்சொற்களைப் பேசுவர்; எவரையும் இகழார். பல்கோடிச் செல்வத்தைக்கொண்டு கொடுப்பினும், தம் பெருமை குன்றும் தொழில்களைப் புரியமாட்டார். பிறர்க்குக் கொடுக்கப் பொருள் இல்லாது வறுமையுற்ற காலத்தும், தம் வள்ளன்மையில் குறையார்.

சித்திர வேலைப்பாடுகள் மிக்க வியன்பெரு மாளிகையில் செய்கை அழிந்து சிதல் மண்டுவதும் உண்டு. எனினும், தங்குதற்கு இடனின்றி முழுதும் அழிதல் இல்லை. முழுநிலவைப் பாம்பு ஒரு பக்கம் பற்றியதாயினும் மற்ருெரு பக்கத்தால் ஒளி வீசி உலகை விளக்குமன்ருே! வெள்ளப் பெருக்கு இல்லாத வேனிற் காலத்தும் ஆறு, தன்பால் ஊறிவரும் நீரால் உலகை ஊட்டுமன்ருே! இவற்றைப்போலவே குடிப் பிறந்தார்க்கு வறுமை ஒருகால் பெருகி வருத்தியதாயினும் ஒப்புரவிற்கு ஒல்கார் என்று சொல்லும் நாலடி நன்னூல்.

'ஏற்றென்றும் இல்லா விடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தற் சேர்ந்தார்க்(கு) அசைவிட்(து)—ஊற்றுவர்
அற்றக் கடைத்தும் அகல்யா(று) அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தெண்ணீர் படும்'

என்பது முனிவர் மொழி.

விருந்து போற்றும் பெருந்தகவுடைய வேளாளர் குலச் செல்வராய இளையான் குடிமாறர் வளம் சுருங்கவும் மனம் சுருங்குதலின்றி அறத்தைத் திறம்பெற ஆற்றினர். இல்லத்தில் உள்ள பொருளை எல்லாம் விற்றும் பணி ஆற்றினர். தம்மையும் விற்றுக் கொடுக்க வேண்டிய நிலையில் கடன் பெற்றுக் கடமை ஆற்றினர். இவ் அடியவரைப் போன்ற உயர்குடிப் பிறந்தார்க்கு எத்துணை வறுமை எய்தினும் இல்லை என்று சொல்ல உள்ளம் இசைவதில்லை.

'நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலும்
இல்லையென மாட்டார் இசைந்து'

என்பது தமிழ் மூதாட்டியின் அமுத மொழியன்றோ !

நிலத்தின் இயல்பை அதன்கண் முளைத்த முளை இனிது காட்டிவிடும். அஃதன்றி நிலத்தில் கிடந்த மண்ணின் இயல்பை அதனை மிதித்துச் சென்ற கால்கள் காட்டிவிடும். அதுபோலவே ஒருவனது வாயில் பிறக்கும் சொற்கள், அவனது குலத்தின் இயல்பைக் காட்டும் என்பர் தெய்வப்புலவர். வழிவழியாக வரும் குலநல முடையான்கண் அன்பு கலவாத பண்பற்ற சொற்கள் பிறக்குமாயின் அவனது குடிப்பிறப்பில் சான்றோர் ஐயுறுவர்.

சிறந்த குடியில் பிறந்தார்க்கு அமையவேண்டிய உயர்ந்த பண்புகளுள் மானமும் ஒன்றாகும். எக் காலத்தும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால்

தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமே மானம் என்பர் பரிமேலழகர். குடிப்பிறந்தார், தம் மானம் அழியவரும் செயல்களைச் செய்தற்குச் சிந்தையிலும் எண்ணார். 'மானம் அழிந்தபின் வாழாமை முன்னிது' என்பர் தம் முன்னோர். தம் நிலையில் திரியாது அடங்கி நின்ற பெரியார், மலையினும் மாணப்பெரியராக மதிக்கப் படுவர். அவர், தம் நிலையில் தவறுவாராயின் தலையி னின்று வீழ்ந்த மயிரனையர் என்பார் வள்ளுவர். மயிர், தலையில் இருக்கும்வரை அதனை அணிசெய்ய எத்தனை செயல்களை மேற்கொள்வோம்! அது கீழே விழுந்து விடுமாயின் தீண்டுவாரும் உளரோ? அதுபோலவே குடிப்பிறப்பால் மலையைப் போன்ற மாண்புடையாரும், தம் மாண்பு குன்றுவதற்குக் காரணமாய செயலை ஒரு குன்றிமணி அளவாயினும் செய்வராயின் அத்தனை மாண்பும் இழந்து அழிவர் என்பார் வள்ளுவர்.

'குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்'

என்பது அவர்தம் சொல்லமுதம்.

குடிப்பிறப்பிற்கு அரண் செய்வது மானமுடைய வாழ்வே. அம் மானம் அழிய வந்தவிடத்து உயிரைக் கொடுத்தேனும் அதனைக் காப்பது குடிப்பிறந்தார் கடன். 'உயிர் வாழ்க்கையில் கொண்ட விருப்பால் மானம் இழந்த பின்னும் வாழும் ஊன் ஓம்பும் வாழ்க்கை இறவா மைக்கு மருந்தாமோ!' என்று கேட்பார் வள்ளுவர். கவரிமான் தனது உடம்பில் உள்ள மயிர்த்திரளில் ஒரு மயிர் நீங்கினாலும் உயிர் வாழாத இயல்புடையது. குடிப் பிறந்தார்க்கு அத்தகைய மான உணர்ச்சி வேண்டுவ தாகும். சிறந்த மானம் உயிர் இழப்பால் எய்தும் எல்லை வந்தால் அதனைத் தாங்காது நீத்தேனும் மானத்தை நிலைநாட்டுவர். சோழன் கோச் செங்கணானால் சிறை செய்யப்பெற்ற சேரமான் கணைக்காலிரும்பொறை, தன்

அரசு மரபின் மானத்தைக் காக்கத் தன்னுயிரை நீத்தான் அன்றோ! கோப்பெருஞ்சோழன், தனது மக்கள், தன்னுடன் மாறுபட்ட செயல் பொன்னை மானத்தைப் போக்கியது என்னும் எண்ணத்தால் வடக்கிருந்து உயிர் நீத்தான் அன்றோ! இங்ஙனம் தமக்கோர் இழிவு வந்த வழி வாழாது உயிர் நீத்த உத்தமரை உலகம் தொழுது ஏத்தும் என்று மொழிவர் வள்ளுவர்.

'இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு தேத்தும் உலகு'

என்பது அவர் தம் சொல்லமுதம்.

பெரியார்க்குரிய அரிய பண்புகளுள் பெருமிதமின்மையும் ஒன்றாகும். உயர்குடிப் பிறப்பும் கல்விச் சிறப்பும் செல்வச் செழிப்பும் ஒருவர்க்குச் செருக்கைக் கொடுப்பன. இவையே பெருமை எய்துவதற்கும் காரணமாவன. செல்வம், தவம், கல்வி, ஆள்வினை இவற்றின் பெருமை சிறுமைகளாலேயே உயர் குலம், இழிகுலம் என்பன பிரிக்கப்படும்; மற்றைய எல்லாம் வெறும் சொல்லளவே என்று நவிலும் நாலடி நன்னூல். செருக்கும் பெருமையும் சேரக் காரணங்கள் இருப்பினும், அவை கொள்ளாத உள்ளத்தரே பெரியராவர். பணிவும் இன்சொல்லும் அவரை அணிசெய்வனவாகும். செல்வச் செருக்கால் சிறந்த ஆசனத்தில் அமர்ந்திருந்தாராயினும் அவர் பெரியராகார். உயர்ந்த ஆசனத்தில் உட்காரத் தகுதியிருப்பினும் அங்ஙனம் அமராது தாழ்ந்த வறு நிலத்து இருந்தார் சிறியராகார்.

'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர், கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். இதனையே அதிவீரராமர்,

'பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்
சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்'

என்று சொல்லியருளினர்.

மக்களுள் முழுதும் குணமே நிறைந்தாரும் முற்றிலும் குற்றமே நிறைந்தாரும் எவரும் இலர். ஆதலின் ஒருவரது குணத்தையும் குற்றத்தையும் நன்கு நாடி, அவற்றுள் மிக்கன யாவையென்பது அறிந்து, அவரைக் கொள்ளுதலோ தள்ளுதலோ செய்தல்வேண்டும் என்பர் வள்ளுவர். பெரியராயினர், பிறர் தம் பெருமைக் குணங்களையே விதந்து பேசுவர். குறைகளைத் தம் வாயால் கூறுர்.

'அற்றம் மறைக்கும் பெருமை, சிறுமைதான்
குற்றமே கூறி விடும்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

மற்றவரால் பெரியரென மதிக்கப்பட விரும்பும் மக்கள் சில நற்பண்புகளைக் கைக் கொள்ளவேண்டும்; அவற்றை மறவாமல் நோன்பெனக்கொண்டு ஒழுக வேண்டும் என்பர் குமரகுருபரர். பிறரது சிறந்த குணங்களை விரித்துப் பேசுவதையும், இழிந்த குற்றங்களை அறிந்திருப்பினும் அவற்றைக் கூருது உள்ளத்துக் கொள்வதையும், எவர்க்கும் பணிந்த இன்சொல்லே வழங்குவதையும் பெரியார்கள் விரதமெனக் கொள்ள வேண்டும் என்று விளக்குவார்.

'பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்'

என்பது அவர் காட்டும் நீதிநெறி.

சிறந்த குணங்களால் நிறைந்த பெரியோரைச் சான்றோர் என்றும் பண்புடையார் என்றும் வள்ளுவர் பாராட்டுவர். உயர்குணங்கள் பலவும் நிறைந்து அவற்றை ஆளும் தன்மையே சாருண்மை என்பர். 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்' என்பது கலித் தொகைக் கூற்று. எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதலே பண்பெனப் படும். 'உலகத்தோடு ஒட்ட வொழுகல்' என்று வள்ளுவரும் சொல்லுவார். பண்பும் சால்பும் நிறைந்தோரே பெரியர் என்ற உண்மையைத் திண்மையுற விளக்க, நம் தெய்வப் புலவர், தம் திருக் குறள் தெள்ளமுத நூலில் பண்புடைமையை நூருவது அதிகாரமாக அமைத்தருளினர். முன் மொழிந்த தொண்ணூற்றென்பது அதிகாரத்துள்ளும் சொல்லிய நல்லியல்புகள் எல்லாம் இனிது அமைந்தவரே பண் புடையார் என்பது வள்ளுவர் உள்ளமாக இருக்க வேண்டும். இன்றேல் பண்புடைமை என்பதனை நூறு என்னும் நிறைவுற்ற எண்ணில் வைத்து இயம்ப வேண்டுவதில்லை.

பிள்ளைகளைச் சான்றோராக்குவது பெற்றோர் கடன் என்று கற்றவர் பேசுவர். 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன்' என்றே பொன் முடியார் நன்மொழி புகல்வார். 'சான்றோன்' என்று, தன் பிள்ளையைப் பிறர் புகழ்ந்து சொல்லக்கேட்டால் பெற்ற தாய் பேருவகை அடைவாள் என்று நம் பெருநாவலரும் பேசுவார். இத்தகைய சால்புக்கு இலக்கணந்தான் யாதோ ?

'அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ(டு)
ஐந்துசால் பூன்றிய தூண்'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். சால்பு என்பது மக்கள் மனத்தே எழுப்பும் மாண்புடைய அறமாளிகை. அவ் அறப் பெருமாளிகைக்கு ஐம்பெருந் தூண்கள் வேண்டும். அவை அன்பு, நாண், ஒப்புரவு, கண்

ணோட்டம், வாய்மை என்னும் தூய்மையான உயர் பண்புகள். இவ்வைந்தனுள் முதற்கண் குறிக்கப்பெறும் அன்பே பெருந்தூணாகை—வைரத்தூணாக நெஞ்சநிலத்து நாட்ட வேண்டும். மற்றைய நான்கும் பக்கத் தூண் களாக மிக்கோங்க வேண்டும்.

இத்தகைய சான்றோர்பால் நல்லனவெல்லாம் இயல்பாகவே உள்ளனவாகும். அவர்கள் பிறர் தீமையைப் பேசார். தாம் மேற்கொண்ட மேலான செயலைச் செய்து முடிக்க, அதற்குத் துணையாவார் எத்தகையராயினும் அவரைத் தாழ்ந்து, தம்மொடு கூட்டிக் கொள்ளுவர். தம்மில் உயர்ந்தார்பால் கொள்ளும் தோல்வியை இழிந்தார்பாலும் ஏற்றுக்கொள்ளத் தயங்கார். அஃது அவர்தம் சால்பின் சிறப்பை அளந்தறியும் அளவு கோலாகும் என்பர் திருவள்ளுவர். தமக்குத் துன்பம் செய்தார்க்கும் இன்பமே செய்து நிற்பர். 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் சால்'பெனச் சாற்றிய வள்ளுவர், இன்னா செய்தாரை ஒறுப்பதற்கும் அதுவே வழியெனக் கூறினார்.

சான்றோர் சிலர் வாழ்வதனாலேயே இவ் உலகம் அழியாது நிற்கின்றது என்பது ஆன்றோர் துணிபு. அவர்கள் சான்றாண்மை குன்றுவாராயின் உலகமே அழிந்துவிடும் என்பர் நம் தெய்வப் புலவர்.

'சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை'

'பண்புடையார்ப் பட்டுண்(டு) உலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்'

என்பன வள்ளுவர் தெள்ளமுத மொழிகள்.

உலக நிலைபேற்றிற்கு, நம் உயர்நாவலர் உரைத் தருளிய இக்கருத்தினைச் சிற்றறிவாளரும் முற்றுணர்ந்து மகிழுமாறு மன்னன் ஒருவன் விளக்கமாக விரித்துரைக்

கின்றான். தந்நலம் சிறிதும் எண்ணாமல் பிறர்நலம் பேணுதலே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு பணி புரிவார் சிலர் பாரில் உளர். அவர்களாலேயே இவ் உலகம் நிலைத்திருக்கிறது. அப் பெரியோர், தெய்வத் திருவருளாலோ முன்னைத் தவத்தாலோ, தமக்கு இந்திரர் உண்ணும் இன்னமிழ்தம் நண்ணுவதாயினும் அதனைத் தனித்துண்ணார்; பகுத்துண்பர். எவரொடும் வெறுப்புக்கொள்ளார். பிறர் அஞ்சத்தகும் துன்பத் திற்குத் தாமும் அஞ்சி, அது தீர்த்தற்பொருட்டுச் சோம்பியிரார். புகழ் வருவதாயின் தமது உயிரையும் உவப்புடன் கொடுப்பர். பழி வருவதாயின் உலக முழுதும் பெறினும் கொள்ளார். எதற்கும் கவலை கொள்ளார். தமது முயற்சியெல்லாம் பிறர்க்கே பயன் படுத்துவர். இத்தகைய வித்தகராலேயே வியன் பேருலகம் நிலவுகிறது என்பது புல்மை சான்ற புரவலனாய கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின் தெளிந்த கருத்தாகும்.

‘உண்டால் அம்மஇவ் வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே, முனிவிலர்,
துஞ்சலு மிலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்,
புகழெனின் உயிருங் கொடுக்குவர், பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர், அயர்விலர்
அன்னமாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே’

என்பது அவ் வழுதியின் பொருண்மொழிப் பாடல்.

நன்மக்கட்கு உரிய உயரிய பண்புகள் இல்லாதவர், எத்துணை நுண்ணிய பேரறிவாளராக இருப்பினும் அவர்கள் மக்களாகார், மரமாவார் என்பது வள்ளுவர் உள்ளம். அரம் தானும் கூரியதாய்ப் பிறவற்றையும்

கூரியதாக்கும் சீர்மையுடையது. அதுபோன்றே அறிஞர் தாமும் நுண்மாண் நுழைபுலம் உடையராய்த் தம்மைச் சார்ந்தாரையும் நுண்ணியராக்கும் திண்ணியராய் இருப்பினும் பண்பாடு இல்லையேல் அவர் மரம் போல்வர். இதனையே தமிழ் மூதாட்டியாரும், 'குறிப்பறிய மாட்டாதவன் நன்மரம்' என்று வலியுறுத்தினர் போலும்.

சால்புடைய நல்லாரைக் காண்பதுவும், நலமிக்க அவர் சொல்லைக் கேட்பதுவும், அவர்தம் நற்குணங்களை நவில்வதுவும், அவரோடு என்றும் இணங்கி இருப்பதுவும் நன்மையே விளைக்கும் என்பர் அத்தமிழ்ச் செல்வியார். ஊரில் சேரும் அங்கணநீர் அனைத்தும் ஒருங்குசேர்ந்து, பேராற்றிலோ பெருங்குளத்திலோ சென்று கலந்துவிடுமாயின் அதன் பெயரே மாறிவிடும். புண்ணிய தீர்த்தம் என்றே எண்ணிப் போற்றப்பெறும். வானில் ஒளிரும் முழுமதியின் நடுவே முயற்கறையும் உளது. எனினும் முயலை நீக்கி முழுமதியைத் தொழுவார் இல்லை. பாலோடு கலந்த நீர், பாலாகவே மதிக்கப்படும். அந்நீர், தான் கலக்கப்பெற்ற பாலில் நிறம் பிரிந்து தோன்றுவதில்லை. இவற்றைப் போலவே பெரியோரைச் சார்ந்து பழகும் சிறியோரும் பெருமையுறுவர் என்பர் சமணமுனிவர்கள்.

'குன்றிய சீர்மைய ராயினும் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை பெறின்'

என்பது முனிவர் மொழியாகும்.

பெரியவர்கள் துணையைப் பெறுவது பெருநலம் விளைப்பதாகும். சிறியவர்கள் தம் சிறுமை நீங்கப் பெறுவதுடன் சிறிது சிறிதாகப் பன்னலங்களும் பாங்குடன் ஓங்கப் பெறுவர். அவர்கள் தம்மைச் சார்ந்தாரைத் தாங்கும் பாங்குடையர். தெய்வத்தாலோ மக்களாலோ வந்த துன்பங்களை நீக்கும் வகையறிந்து போக்குவர். பின் அத்தகையன வாராத வண்ணம் முன்னரே அறிந்து காப்பர். இத்தகைய பெரியாரைப் பேணிக் கொள்வது

